REGISTERED No. M. 1500.

# நவசக்தி

NAVASAKTI

(தமிழ் வாரப் பதிப்பு)

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவருவது.

| சந்தா விவரம். | | |
| --- | --- | --- |
| வருட சந்தா | ரூ. | 5 0 |
| ஆறுமாத சந்தா | ,, | 3 0 |
| மூன்றுமாத சந்தா | ,, | 1 8 |
| வெளி நாடு-வருட சந்தா | ,, | 6 0 |

"வீடு பெறநில்"

"மாற்ருனுக் கிடங்கொடேல்"

விளம்பர விகிதம்.

கலம் 1-க்கு வாரம் 1-க்கு ரூ. 7 0
சில்லரை விளம்பரம்-1 அங். 0 8
நீண்டகாலம் விளம்பரஞ் செய்வோர் நேரே எங்கட்கு எழுதவும்.

"ஏற்பதிகழ்ச்சி"

சிலம்பு 2. துந்துபிஸூ ஆடிமீ ௳ (21—7—22) பரல் 37

## ஒரு வெள்ளையரின் வாய்மை

பிரிட்டிஷ் காமன்ஸ் சபையில் இந்தியாவைப் பற்றிய வாதம் நடைபெற்றபோது ஸ்ரீமான் பென்ஸ்பூர் செய்த உபந்நியாசத்தைச் சென்ற வாரம் வெளியிட்டோம். அவருடைய உபந்நியாசம் இந்தியாவிஷயத்தில் அநுதாபத்தைக் கொண்டதாயிருந்தது. அவருக்கு மாறுபட்ட அபிப்பிராயமுடையவரான தளபதி ஸர் சார்லஸ்யேட் என்பவருடைய உபந்நியாசத்தை இந்த வாரம் வெளியிடுகிறோம். இவருடைய பிரசங்கத்தினின்றும் இங்கிலாந்திலுள்ள ஆங்கிலோ இந்தியருடைய மனப்பான்மை நன்கு புலனுகும்.

• • •

"லார்ட் விண்டர்டனின் இனிமையான உபந்நியாசத்தை நாம் அனைவரும் கேட்டோம். தொழிற் கட்சியார் இந்தியா விஷயத்தில் எவ்வளவு கவலை செலுத்துகின்றனர் என்பதை நிரூபிக்க வேண்டுமானுல் அவர்கள் அமரும் ஆசனங்கள் யாவும் காலியாயிருப்பதைக்காணலாம். இந்தியாவைப்பற்றிய வாதம் நடைபெறும் இச்சமயத்தில் அக்கட்சியாரில் ஒருவரே பிரசன்னமாயிருக்கின்ருர்.

ஸ்ரீமான் இர்வின்:—வேருருவரும் இருக்கிருர்!

தளபதியேட்:—ஸ்ரீமான் பென்ஸ்பூர் இப்பொழுது செய்த உபந்நியாசம், இந்தியாவிலுள்ள நமது சத்துருக்களுக்கு ஓர் உற்சாகத்தைக் கொடுக்கும். இந்தியா அரசாங்கத்தினிடத்தில் எனக்கு ஒரே ஒரு குறை உண்டு. அவர், சில ஆண்டுகளாக, பிரிட்டிஷ் ஆட்சிக்கு விரோதமாயிருப்பவர்களுக்கு, அவர்களைச் சமாதானப்படுத்து முகத்தான், ஊக்கம் கொடுத்துவருகின்றனர். கலகக்காரர்களுடைய கூச்சலுக்கிணங்கி, பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு ஆதரவளிப்பவர்களை, அவர்கள் ஊக்கம் குறைந்துபோகும் வண்ணம் நடத்துகின்ருர்கள். இந்த முறையை அவர் இனியும் அநுசரிக்கமாட்டார் என்று கருதுகிறேன். இந்தியா அரசாங்கத்தார், அடிக்கடி தங்கள் பலஹீனத்தைக் காட்டுவதால், இராஜ பக்தியுள்ளவர்களுடைய உற்சாகம் குன்றிப்போகிறது. பெரிய குழப்பத்தை அடக்கினுல், அதற்காகத் தங்கள் அரசாங்கத்தாருடைய ஆதரவைப்பெற முடியாது என்ற காரணத்தினுல், இந்தியாவிலுள்ள உத்தியோகஸ்தர்கள் தளர்ச்சியுற்றிருக்கிருர்கள்.

• • •

1919-ம் வருஷம் பஞ்சாபில் எழுந்த கலகத்தை அடக்கிய உத்தியோகஸ்தர்கள் எவ்வளவு கேவலமாக நடத்தப்பட்டார்கள் என்பதை ஈண்டுக் கவனிக்கவேண்டும். இதன் பயனை மலபார் குழப்பத்தில் நாம் கண்டுவிட்டோம். இந்தக் குழப்பம் நீடித்துக்கொண்டேபோகிறது. அது முடிவடைந்துவிட்டதாக லார்ட் விண்டர்டன் கூறினுர். ஆனுல் அக்குழப்பம் இன்னும் சரியாக முடிவுபெறவில்லை. மலையாளக் குழப்ப ஆரம்பத்தில் இரண்டோலிப உத்தியோகஸ்தர்கள், மேலதிகாரிகளின் கண்டனத்திற்கு உட்படுவோமோ என்ற பயத்தினுல் தங்கள் விருப்பப்படி நடந்துகொள்ள முடியாதவர்களா யிருந்தார்கள். இதன் பயனுக அவர்கள் கொலையுண்டார்கள். இந்தியாவிலுள்ள அரசியற் கைதிகளை விடுதலை செய்துவிட வேண்டுமென்று ஸ்ரீமான் பென்ஸ்பூர் கூறினுர். அரசியற்குற்றவாளிகளும் சாதாரணக் குற்றவாளிகளும் வெவ்வேறு விதமாக நடத்தப்படுவதை நாம் காண்கிருேம். இனி அங்ஙனம் நடத்தாமல் எல்லாரையும் ஒன்ருகநடத்தவேண்டுமென்று விரும்புகிறேன். இதனுல் இராஜபக்தியுள்ள இந்தியர்களின் விசுவாசத்தை நாம் பெற முடியும்.

• • •

பெரிதும் புகழப்பட்ட மாண்டேகு செம்ஸ்பர்ட் சீர்திருத்தத்தினுல் இந்தியாவில் அதிக திருப்தி உண்டாகி விடவில்லை. இந்தியாவிலுள்ள சட்டசபைகள் பல விதமான வெற்றிகளை அடைந்து விட்டதாகக் கூறப்படுகிறது! இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அதிகாரத்தைக் குறைக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் இந்தச் சட்டசபைகள் பல தீர்மானங்களை நிறைவேற்றி வீணுகக் காலத்தைக்கழிக்கின்றன. இராஜத் துரோகத்தை அடக்குவதற்காக ஏற்பட்ட சட்டங்களையும் அச்சுச் சட்டத்தையும் ரத்துசெய்யும் படிக்கும், இராணுவத்தைக் குறைக்கும்படிக்கும், போலீஸ் இலாகா, கல்வி இலாகா முதலியவைகளுக்கு ஐரோப்பியர்களைச் சேர்க்காத படிக்கும், சிவில் சர்விஸ் உத்தியோகஸ்தர்களுடைய சம்பளங்களைக் குறைக்கும்படிக்கும் பல தீர்மானங்கள் கொண்வேரப்பட்டன. ஆப்கானியர் மற்ருெருமுறை படையெடுத்துவந்தால் வடஇந்தியா முழுவதிலும் குழப்பம் ஏற்படும்படியான தன்மையில் இராணுவ பலம் குறைக்கப்பட்டிருக்கிறது. எத்தகையவரும் அஞ்சும் வண்ணம் இந்தியாவில் கலகம் பரவிக்கொண்டு வருகிறது. சென்ற மூன்று வருஷ காலமாக இந்தியா அரசாங்கத்தார் காட்டிய பலஹீனத்தால் சட்டத்துக்கும் சமாதானத்திற்கும் இருந்த ஒரு மரியாதையே போய்விட்டது. குற்றவாளி ஒருவனை போலீஸ் உத்தியோகஸ்தர் ஒருவர் கைதி செய்யப்போனுல் உடனே ஒரு பெரிய கலகக்கூட்டம் அந்தப் போலீஸ் உத்தியோகஸ்தரைச் சூழ்ந்துகொண்டு, அந்தக் குற்றவாளியை விடுதலை செய்ய வேண்டுமென்று கூறிக் கலகம் செய்கிறது. இதன் பயனுக உயிர்ச்சேதங்கள் உண்டாகின்றன. சேவர் உடன்படிக்கை சரியாக நிறைவேற்றப்படாததினுலேயே இச்சம்பவங்கள் உண்டாகின்றன என்று கூறுவது சுத்த மூடத்தனமாகும்.

• • •

இந்தியாவிலுள்ள போலீஸ் சிப்பந்திகளின் நன்மையை உயர்த்த வேண்டுமென்று நான் கூறுகிறேன். மற்ருெரு விஷயத்தையும் ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறேன். இந்தியாவிலிருந்து மேனுடுகளுக்குப் படிக்க வரும் இந்தியர்களைக் கொண்டு, இந்தியாவிலுள்ள அனைவரும் இங்ஙனமே இருந்தார் என்று நினைத்தல் பெருந்தவருகும். அத்தகையவர்களுடனேயே ஸ்ரீமான் பென்ஸ்பூர் நட்புரிமை பாராட்டி எல்லா இந்தியர்களையும் அவர்களுடைய நிலையில் வைத்துப் பேசுகிருர். ஸ்ரீமான் பென்ஸ்பூரும் தளபதிவெட்ஜ்வுட்டும் இந்தியாவில் கிலாபத் கிளர்ச்சிக்காரர்கள், ஒத்துழையாதார்கள் இவர்கள் மத்தியில் சுற்றுப் பிரயாணம் செய்தார்கள் என்பதை அனைவரும் அறிவார்கள். இவர்கள் செய்த உபந்நியாசங்கள் அக்கிளர்ச்சிக்காரர்களுக்கு என்ன விதமான உணர்ச்சியை உண்டு பண்ணியிருக்கும் என்பதை என்னுல் கூற முடியாது. ஸ்ரீமான் பென்ஸ்பூர் எந்தக்கிளர்ச்சிக்காக ஆதரவு கொடுத்துப் பேசினுரோ அந்தக் கிளர்ச்சியின்பயனுகவே மாப்பிள்ளைமார் கலகம் ஏற்பட்டது.

ஸ்ரீமான் ஸ்பூர்:— அங்ஙனம் கூறுவது தவறு; கிலாபத்துக்காகநான்இந்தியாவிலாவது இங்கிலாந்திலாவது எங்கும்பேசியதேயில்லை.

தளபதியேட்:—நான் இந்தியப் பத்திரிகைகளைப் படித்தமட்டில், ஒத்துழையாதார் கூட்டங்கள் நடைபெற்றன வென்றும் அவைகளில் காந்தி, முகம்மது அலி இவர்களை ஸ்ரீமான் ஸ்பூர், ஆதரித்துப் பேசினுர் என்றும் தெரிகின்றன. மாப்பிள்ளைமார் குழப்பத்தில் கிறிஸ்துவர்கள் மாத்திரம் கொல்லப்படவில்லை. இந்துக்கள், நூற்றுக்கணக்காக, ஆயிர…ணக்காக வதைசெய்யப்பட்டார்கள், அவர்கள் உயிரோடு எரிக்கப்பட்டார்கள். தங்கள் சவக்குழிகளைத் தாங்களே தோண்டிக்கொள்ளும்படி செய்யப்பட்டார்கள். ஸ்ரீமான் ஸ்பூர் அந்தச் சமயத்தில் அங்கிருந்திருந்தால் மிக நன்ருயிருக்கும்.

சபைத்தலைவர்:— அங்ஙனம் பேசுவது பெருந்தகைமை யாகாதென்று நான் அஞ்சுகிறேன்.

தளபதியேட்:— அங்ஙனமாயின் மன்னிக்கவேண்டும். குழப்பம் உண்டாவதற்கு உதவியாளராயிருந்த ஸ்ரீமான் ஸ்பூர், குழப்பத்தின் மத்தியிலேயே சென்றிருக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

• • •

இந்தியாவின் நிலைமையைப்பற்றி இந்தியா அரசாங்கத்தார் தந்தி மூலமாக அனுப்பிய செய்தியை இந்தியாஆபீசார் ஓர் அறிக்கைமூலமாக வெளியிட்டனர். இத்தந்திக்காக எவ்வளவுபணம்செலவழிக்கப்பட்டதுஎன்றுஉதவி இந்தியாமந்திரியாரைக் கேட்டேன். நூற்றிருபதுபவுன் (ஆயிரத்தெண்ணூறு ரூபா) செலவழிக்கப்பட்டது என்று அவர் கூறினுர். இவ்வளவு பணமும் வீணுகச் செலவழிக்கப்பட்டதென்றே நான் கருதுகிறேன். சென்ற மூன்று வருஷ காலமாக அரசாங்கத்தார் அநுஷ்டித்து வந்த பலமற்ற தன்மையை இந்த அறிக்கை விளக்கிக் காட்டுகிறது.

• • •

இந்தியாவிலுள்ள ஐரோப்பியர்கள், தற்காப்பு நிமித்தம் ஆயுதங்களை வைத்துக்கொள்ள உத்தரவு கொடுக்கப்படுகிருர்களில்லை. இந்தியாவிலுள்ள ஓர் உத்தியோகஸ்தர் எனக்கு எழுதியுள்ள ஒரு கடிதத்தின் பாகத்தை இங்குப் படித்துக் காட்ட விரும்புகிறேன். அது வருமாறு:— ஐரோப்பியர்கள் துப்பாக்கிகளை வைத்துக்கொள்ள அநுமதி கொடுக்கக் கூடாதென்ற கொள்கையை மாகாண அரசாங்கங்கள் கொண்டிருக்கின்றன. என்னிடத்தில் ஒரு துப்பாக்கியில்லை. ஒரு துப்பாக்கி வைத்துக்கொள்ள அநுமதி கொடுக்க வேண்டுமென்று டிப்டி கமிஷனருக்கு மனு செய்து கொண்டேன். என் மனுவை, எவ்வித காரணமுங் காட்டாமல் அவர் நிராகரித்து விட்டார். மற்ருேர் உத்தியோகஸ்தர், தம்மிடத்திலிருந்த துப்பாக்கியை வைத்துக் கொள்வதற்கு அநுமதி கொடுக்க வேண்டுமென்று கேட்டதும், போலீஸார் அவருடைய துப்பாக்கியைப் பறிமுதல் செய்து விட்டனர். இங்ஙனமே பல ஐரோப்பியருடைய மனுக்களும் நிராகரிக்கப்பட்டிருக்கின்றன. இம்மனுக்களை அரசாங்கத்தாருடைய உத்தரவுகளின் பேரிலேயே டிப்டி கமிஷனர் நிராகரிக்கிருர் என்றுசொல்லப்படுகிறது. ஆயுதங்கள் வைத்துக் கொள்வதற்கு அநுமதியளிப்பதில் எவ்வித சாதிவேற்றுமையும் காட்டப்படக் கூடாதென்ற அரசாங்கத்தாருடைய கொள்கையே இங்ஙனம் மனுக்களை நிராகரிக்கும்படி செய்கிறதென்று சொல்லப்படுகிறது. கொள்ளைக் கூட்டங்கள் நாடெங்கும் சுற்றிக் கொண்டு வருகின்றன. இந்தியர்கள், பிரிட்டிஷாருக்கு விரோதமான உணர்ச்சியையே கொண்டிருக்கின்றனர். இராக் காலத்தில் ஆயுதமின்றி வெளிச் செல்வது அபாயமாயிருக்கிறது" இந்தக் கடிதத்திற் காணப்படும் விஷயங்களைக் குறித்து உதவி இந்தியா மந்திரியார் விசாரணை செய்வார் என்று கருதுகிறேன்.

• • •

இந்தியன் சிவில் சர்விஸாருடைய பரிதாப நிலைமை அனைவருக்கும் தெரியும். அந்த உத்தியோகத்தினின்று ஒவ்வொருவரும் விலகிக்கொண்டு வருகிருர். இந்தியாவிலுள்ள சிவில் சர்விஸ் உத்தியோகஸ்தர்கள், தங்களுடைய சம்பளத்தைக் கொண்டு வாழமுடியவில்லை. அவர்கள் தங்கள் பிள்ளைகளுக்குக் கல்வி வசதி அளிக்க முடியவில்லை. தங்கள் குழந்தைகளையும் பெண்டுகளையும் இங்கிலாந்திற்குத் திருப்பி அனுப்பவும் முடியவில்லை. அவர்களால் ஒரு பைசாகூட சேர்க்கமுடியவில்லை. இத்தகைய நிலைமை உதவி இந்தியா மந்திரியார் கவனிக்கவேண்டும். அவர்களுக்கு வருஷந்தோறும் உபகாரச்சம்பளம் கொடுக்கப்படும் என்ற உறுதிமொழியைப் பார்லிமெண்டினிடமிருந்து வாங்கிக்கொடுக்கவேண்டும். இவைகளையெல்லாம் கவனிக்குமாறு உதவி இந்தியா மந்திரியாரைக் கேட்டுக்கொள்கிறேன்.

---

## திருப்பதியில் அடக்குமுறை

நாராயணவரம் எனுமிடத்தில் பறியல் செய்ததற்காக, ஸ்ரீமான் எம். ஸ்ரீநிவாசாச்சாரி என்பார் இ. பி. கோ 290-வது பிரிவுபடி அறு ரூபா அபராதம் விதிக்கப்பட்டு அபராதத் தொகையைக் கட்டத் தவறினுல் அதற்காக நான்குமாத வெறுங்காவல் தண்டனையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று திருப்பதி மாஜிஸ்ட்ரேட்டால் கட்டளையிடப்பட்டார். மேற்கூறிய குற்றத்திற்காகவே ஸ்ரீமான்களான இராகவரெட்டி, கேசவமூர்த்தி ஐயங்கார், சேஷா சார்லு ஆகிய இவர்கள் மூவருக்கும் ரூபா 50 அபராதமும் இல்லாவிட்டால் இரண்டுமாத வெறுங்காவல் தண்டனையை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்றும் திருப்பதி மாஜிஸ்ட்ரேட்டால் தீர்ப்பு சொல்லப்பட்டது.

---

## ஒரு தீரச்செயல்

### ஒரு புலி கொல்லப்பட்டது.

திருநெல்வேலியிலுள்ள தென் திருப்பேரையைச்சேர்ந்த ஒரு வயலில் புலியொன்றுபடுத்துக்கொண்டிருந்தது. அதைப்புலியென்றுஅறியாது அதன்மீது ஸ்திரீ ஒருத்தி ஒரு கல்லைவிட்டு எறிந்தாள். புலி சீறவே அவள் ஓட ஆரம்பித்தாள். இதையறிந்த நான்கு பள்ளர்கள் கோடரியையும் அரிவாளையும் கையில் ஏந்தி அப்புலியை எதிர்த்தார்கள். தைரியசாலியான ஒருவன் அதன் நாக்கைப் பிடித்துக்கொள்ள மற்றவர்கள் கோடரியைக் கொண்டு அதன் கழுத்தை நறுக்கிக் கொன்றுவிட்டார்கள். இருவர்க்கும் பலத்த காயம்.




நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)

சென்னை 1922ஞு ஜூலைமீ 21உ

## "திராவிடன்"

"திராவிடன்" தோன்றிய நாள் தொட்டு இந்நாள் வரை எவ்விதநோக்கமுமின்றி, எவ்வித கொள்கையுமின்றி, நகையொன்றே நற்பயனுக் கொண்டு களிமொழியால் நாட்டை மயக்கி வருவதில் பேர் பெற்றவன் என்பதை நாம் அறிவோம். உயரிய நோக்கமும் சிறந்த கொள்கையும் "திராவிட"னிடத்தின்மையால் தமிழ் மக்களிற் பெரும்பான்மையோர் அவனைக் கனவிலுங் கருதுவதில்லை.

தமிழ் நாட்டிற் பிராமணரல்லாதார் பெருந் தொகையினராயிருந்தும், அவருள் எத்துணைபேர் "திராவிட"னைத் தொடுகின்றனர் என்பது "திராவிட"னுக்கே தெரியும். உண்மையாகப் பிராமணரல்லாதார் நலன் நாடித் "திராவிட"ன் உழைத்து வருவானாயின், அவனைப் போன்னேபோல் அன்னார் போற்றுவர். பிராமணரல்லாதார் பெயரை முழக்கிக்கொண்டு அதிகாரவர்க்கத்துக்கு ஆக்கந்தேடும் மறத்தொண்டைத் "திராவிடன்" ஆற்றிவருதலான், பிராமணரல்லாதாருட் பெரும்பான்மையோர் "திராவிட"னைத் தீராவிட மெனக்கொண்டு, அவனைத் தொடாது வாழ்கிறார்.

தமிழ் நாட்டில் இத்துணைச் செல்வாக்குப் பெற்றுள்ள "திராவிடன்" சில நாளாக "நவசக்தி"யின் மீது பாய்ந்து வருகிறான். தமிழ் நாட்டில் சீரும் சிறப்பும் செல்வாக்கும் பெற்றுள்ள ஒரு பத்திரிகையின் மீது பாய்ந்து, இழிமொழிகளால் அதனை வைவதனால் தனக்குப் பெரும் புகழும் விளையும் என்று "திராவிடன்" கருதுகின்றான் போலும்! தென்காசியில் கூடிய திருநெல்வேலிஜில்லா மகாநாட்டாலும், "நவசக்தி" ஆசிரியர் திருநெல்வேலி ஜில்லாவின் பல பாகங்களிற் சென்று செய்த உபந்நியாசங்களாலும் தனது கட்சி சாய்ந்துவிடுமோ என்ற அச்சம் திராவிடனுக்குத் தோன்றி, அவ்வச்சமேலீட்டான் வெகுண்டு மதிமயங்கிப் பாரதமாதா ஆனந்தத்தாண்டவம் புரியும் சுதந்திர அரங்கமாகிய காங்கிரஸைப் 'பிண'மென்றும், மகாத்மாவாகிய காந்தியடிகளை 'முட்டாள்' என்றும் பிதற்றுகிறான். இவன் பிதற்றல் இவன் பிறக்கும் கூவ நதிக்கரையிலேயே வீழ்ந்திறக்கும்.

சென்ற புதன்கிழமை "திராவிடன்" சென்றவார "நவசக்தி"யின் தலையங்கத்தின் உண்மை தேறாது உளறியிருப்பதை உற்று நோக்கியபோது எமக்கு நகைப்புண்டாயிற்று. ஒரு தமிழ்ப் பத்திரிகை! "திராவிடன்"! தினப்பதிப்பு! மிக அழகிய தலையங்கம்! என்று நகையாடாது வேறென் செய்வது? சிறு குழந்தைகள் மழலைச் சொற்களுக்காவது பொருளுண்டு. திராவிடன் தலையங்கத்துக்கு என்ன பொருளுண்டு? ஐயோ! திராவிடனே! இரங்குகிறோம். சென்ற புதன்கிழமை "திராவிடன்,"

> ஒரு பத்திரிகையின்கண் நல்லதொரு கட்டுரை தோன்றுமேனின், அக்கட்டுரையை வேறு பத்திரிகைகள் எடுத்தாளுதல் இவ்வுலகத்தின் கண் பண்டுதொட்டு வழக்கமாய் இருந்து வருகின்றது. இவ்வுண்மையைப் பத்திரிகையின் ஆசிரியர்களும், பத்திரிகைகளைப் படிப்போரும் மிக நன்றாய் உணர்வார்கள். அவ்வாறாக, பிற பத்திரிகைகளில் காணப்படும் அரிய கட்டுரைகளை நம் பத்திரிகையில் நாம் எடுத்து வெளியிட்டால், அதை இழிவெனக் கூறுதல் இவள் தன் அறிவின் சிறுமையைத் தானே உலகத்திற்குக் காட்டிக் கொள்வதாகும். பத்திரிகை நடாத்தும் முறையைச் சிறிதேனும் இவள் உணர்ந்திருப்பாளேனின், இங்ஙனம் பொறித்திருப்பாளல்லள்.

என்று பிதற்றுவதைக் கண்ணுற்றேம். ஒரு பத்திரிகையில் வருஞ் சிறந்த கட்டுரைகளை மற்றொரு பத்திரிகை யெடுத்தாள்வது எவருக்குத் தெரியாது? இதை "நவசக்தி" அறியாதிருக்கவில்லை. "நவசக்தி"யும் "எங் இந்தியா" "மராட்டா" முதலிய பத்திரிகைகளிலிருந்து வாரந் தோறும் கட்டுரைகளை வெளியிட்டுவருகிறாள். "திராவிட"னும் அவ்வாறேகட்டுரைகளைக் கையாளலாம். கட்டுரை முடிவில் பத்திரிகைப் பெயரைப் பொறித்தல்வேண்டும். "திராவிடன்,"-"சுதேசமித்திரன்" "தேசபக்தன்" என்னும் இரண்டு பத்திரிகைகள் வருந்தி மொழிபெயர்த்து வெளியிட்ட கட்டுரைகள் பலவற்றைப் பேர் ஊர் குறிப்பிடாது பல முறை வெளியிட்டிருப்பது புதன்கிழமை தலையங்கமெழுதியவர்க்குத் தெரியாது போலும்! ஊர் பேரின்றிக் கட்டுரைகளை வெளியிடும் "திராவிடன்" எமக்கு அறிவு கொளுத்தவந்ததைக் குறித்து நகையாடாது வேறென் செய்வது? "திராவிடன்" மேலும்,

> * * * * அறிஞர் கருதுவர்' என்று அறைகின்றாள். அறிஞர் என்ற சொல்லிற்கு "நவசக்தி"யின் பொருள் வேறாய் இருத்தல் வேண்டும். ஏனெனின் உலகத்தார் யாரை அறிவுடையார் எனக் கருதுவார்களோ, அவர்களை "நவசக்தி" அறிவற்ற மாக்கள் என்று கருதும் இயல்புடையவள். உலகத்தாரான் பகுத்தறிவு அற்ற மாக்கள் என்று புறக்கணிக்கப்படும் ஒத்துழையாதாரை இவள் பேரறிஞர் என்றும் மகாத்துமாக்கள் என்றும் புகழும் மூடக்கொள்கையைப் பின்பற்றியவள். ஆகலான் இவள் குறிப்பிடும் அறிஞர்கள் அறிவில்லாதவர்களே யாவர் என்பது நம் துணிபாகும்.

என்றுகுரைக்கிறான். திராவிடன் "அறிஞர்" என்னுஞ் சொல்லுக்குக் கூறும் பொருளை இனித்தமிழ் அகராதிகளில் பதித்தல்வேண்டும்! "நவசக்தி" எவரை மக்களாகக் கொள்ளல் வேண்டுமோ அவரை மக்களாகவும், எவரை மாக்களாகக் கோடல் வேண்டுமோ அவரை மாக்களாகவும் கொள்கிறாள். ஒத்துழையாதாரையும் மகாத்மாவையும் நாம் முனிவரர் என்றும் போற்றுகிறோம். அக்கொள்கை திராவிடனுக்கு மூடக் கொள்கையாய்த் தோன்றலாம். பட்டத்துக்கும் உத்தியோகத்துக்கும் தேசத் துரோகஞ் செய்து அதிகாரவர்க்கத்தார் கால் வருடுவோரைத் "திராவிடன்" அறிஞர், முனிவரர், மகாத்மா என்று அழைப்பதை நாம் தடுக்கவில்லை. தேசத்தின் பொருட்டு உடல் பொருள் ஆவி மூன்றையும் அர்ப்பணஞ் செய்து தியாகமூர்த்திகளாக வாழும் மக்களை நாம் மகாத்மாக்கள் என்றே போற்றுவோம். அவரே அறிஞர் என்பது எமது கொள்கை.

பின்னைத் "திராவிடன்" "ஊடல்" என்னுஞ் சொல்லைப்பற்றி அழுகிறான். "ஊடல்" என்ற மகுடமிட்டுச் சிலம்பு ஒன்றில் பரல் இரண்டில் நாம் எழுதியுள்ள கட்டுரையையும், ஸ்ரீமான் முதலியார் தென்காசியில் செய்த அக்கிராசன உபந்நியாசத்தில் போந்துள்ள "அன்பை அடிப்படையாகக் கொண்ட ஊடலால் பின்னைச் சொலற்கரிய பேரின்பமுண்டு" என்னும் வாக்கியத்தையும் "திராவிடன்" ஊன்றிக் கவனித்து உண்மை தெளிவானாக. ஒத்துழையாமை பொறாமை காரணமாக எழுந்ததன்று என்பதைத் திராவிடனுக்கு அறிவுறுத்துகிறோம். அஹிம்சையை அடிப்படையாகக்கொண்டது ஒத்துழையா இயக்கம் என்பது உலகறிந்த தொன்று. சென்ற புதன்கிழமை "திராவிட"னில் போந்த தலையங்கத்தின் அறியாமையைப் புலப்படுத்தவே அவன் உரைகளில் சிலவற்றை மேலே எடுத்துக் காட்டினேம்.

இனித் "திராவிடன்" சினந்துகூறிய வேறு பல மொழிகளில் வசை நிரம்பியிருப்பதால், அவைகளைப் பொருட்படுத்தி வசைமொழிகளால் பதிலிறுப்பது ஒத்துழையாத் தருமமன்று. ஆதலால் இவ்வளவோடு நின்று விடுகிறோம். இனித் "திராவிடன்" என்ன குரைக்கினுங் குரைக்க.

## இந்தியர்களின் பரிதாப நிலை

பிஜிக்குச் சென்ற ஸ்ரீமான் வேங்கடபதி ராஜூவும் பிரிட்டிஷ் கயானுவுக்குச் சென்ற ஸ்ரீமான் கேசவப் பிள்ளையும் சமீபத்தில் சென்னையில் தாங்கள் கண்ட அநுபவங்களைப் பற்றி ஓர் உபந்நியாசம் புரிந்தார்கள். இவர்களின் உபந்நியாசத்தைக் கொண்டு குடியேற்ற நாடுகளிலுள்ள இந்தியர்களின் நிலை மிகவும் பரிதபிக்கத்தக்கதா யிருக்கிறதென்று எண்ண வேண்டியிருக்கிறது. ஸ்ரீமான் ராஜூவும் ஸ்ரீமான் பிள்ளையும் மிதவாதிகள் அங்ஙனமிருந்தும் அவர்கள் பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்ட இந்தியர்கள் குடியேற்ற நாடுகளில் மிகவும் கேவலமாக நடத்தப்படுகிறார்கள் என்று கூறுகிறார்கள். ஸ்ரீமான் கேசவப்பிள்ளையைப் பிரிட்டிஷ் கயானுவிலுள்ள ஐரோப்பியர்கள் 'கூலி அரசர்' என்று அழைத்தாரெனின் இந்தியர்களைப் பற்றி அவர்கள் கொண்டிருக்கும் தாழ்வான அபிப்ராயத்தைப் பற்றி நாம் ஒன்றும் கூற வேண்டுவதில்லை. பிஜியில் இந்தியர்கள் படும்பாடு சொல்லத்தரமன்று. ஆங்குள்ள இந்தியர்களின் கூலி குறைக்கப்பட்டுவிட்டதாம். ஆங்குள்ளவர்களின் வாழ்க்கை, ஒழுக்கம் முதலியன சீர்கெட்டுப் போயிருக்கின்றன. ஆங்குள்ள இந்தியர்களின் நிலைமையைக் கேட்டு எத்தகைய கன்னெஞ்சருடைய உள்ளமும் உருகாமலிராது என்று ஸ்ரீமான் வேங்கடபதி ராஜூ கூறுகிறார். பிஜியிலுள்ள இந்தியரில் எவரேனும் இறந்துபோனால் அவர் எரிக்க விடப்படுவதில்லை யென்றும் புதைக்கவே அநுமதி கொடுக்கப் படுகின்றனரென்றும், இங்ஙனம் புதைப்பதற்குக் கட்டணம் செலுத்த வேண்டுமென்றும் கூறப்படுகின்றன. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலுள்ளவர் சுதந்தரத்தை, சமத்துவத்தை அநுபவிக்கின்றனர் என்று சொல்லப்படுகிறது. ஸ்ரீமான் சாஸ்திரியார்பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் வன்மையைப் புகழ்ந்து கொண்டே செல்கிறார். தம் சகோதரர்கள், பிரிட்டிஷ் அரசாங்கத்தின்நேரான ஆட்சிக்குட்பட்ட நாடுகளில் எங்ஙனம் நடத்தப்படுகிறார்கள் என்பதை அவர் சிறிதும் கவனித்தாரில்லை.

பிரிட்டிஷ் கயானுவுக்குச் சென்ற ஸ்ரீமான் கேசவப் பிள்ளை அவர்களும் சி. ஐ. டி. போலீசாருடைய கவனத்துக்கு உட்பட்டனர் என்று அறிகிறோம். அரசாங்கத்தாரின் நன்மதிப்பைப்பெற்றவராயும், சென்னைச்சட்ட சபையின் உதவித் தலைவராயும், மிதவாத சிகாமணியாயும் விளங்கும் ஸ்ரீமான் பிள்ளையவர்களையே சி. ஐ. டி. யார் தொடர்ந்தனர் என்றால் தேசிய வாதிகளின் நிலைமையைப்பற்றி நாம் கூற வேண்டுவதில்லை. ஆனால் ஸ்ரீமான் கோகலேயும், தற்போது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் சிறந்த துணைவராக விளங்கும் ஸ்ரீமான் சாஸ்திரியாரும் சி. ஐ. டி. போலீசாரின் தொந்தரவுகளுக்குட் பட்டனரெனில் ஸ்ரீமான் கேசவப் பிள்ளையின் அநுபவத்திற்காக நாம் ஆச்சரியப்படவில்லை.

ஸ்ரீமான் பிள்ளையவர்களைப் போன்ற மிதவாதிகளிற் பலர் இங்ஙனமே குடியேற்ற நாடுகளுக்குச் சென்று வருவார்களானால் பெரிதும் நலமாயிருக்கும். அந்நிய நாடுகளில் இந்தியர்கள் தாழ்வாக நடத்தப்படுவதற்குக் காரணம், இந்தியர்கள் சுயமரியாதையை இழந்து கொள்வதேயாகும் என்று ஸ்ரீமான் வேங்கடபதி ராஜூ குறிப்பிட்டதை நாம் அங்கீகரிக்கிறோம். சுயமரியாதையை இழந்து கொள்ளாமல் எல்லா மிதவாதிகளும் நடந்து கொண்டார்களானால், இந்தியா விரைவில் சுய ஆட்சி பெற்றுவிடும்என்று திண்ணமாகக்கூறுவோம். மிதவாதிகளின் சுய மரியாதையற்ற செயல்களினாலேயே இந்தியாவும் தன் சுய மரியாதையை இழக்கவேண்டி இருக்கிறது.

## புதிய சட்டம்

ரௌலட் சட்டத்தினும் கொடியதொரு சட்டம் அடுத்த செப்டம்பர் மாதத்தில் கூடப்போகும் இந்தியச் சட்டசபையில் இந்தியா அரசாங்கத்தாரால் கொண்டு வரப்படும் என்று அறிகிறோம். ஒத்துழையா இயக்கத்தை அடக்க இப்பொழுதுள்ள சட்டங்கள் போதுமான ஆற்றலுடையனவாயில்லையென்ற காரணத்திற்காகவே இந்தப் புதிய சட்டத்தை இந்தியா அரசாங்கத்தார் வரைந்து கொண்டிருக்கின்றனர் என்று சொல்லப்படுகிறது. பொது ஜனங்கள் செல்வதற்குச் சௌகரியம் ஏற்படக் கூடிய நிலைமையில் நடைபெறும் கூட்டங்களைப் பொதுக் கூட்டங்களென்று கூறப்படுவதற்கும், இந்தக் கூட்டங்களுக்குச் செல்லும்சிலரையாவது பலரையாவது ஜில்லா மாஜிஸ்ட்ரேட் கைதி செய்வதற்கும் இச்சட்டம் இடங்கொடுக்கும் என்று சொல்லப்படுகிறது. இப்பொழுதுள்ள குற்றவிவகாரத்திருத்தச் சட்ட மசோதா திருத்தி அமைக்கப்படுமென்றும் அதிலேயே இந்தப் பிரிவுகள் சேர்க்கப்படும் என்றும் சிலர் கூறுகின்றனர். இவை எவ்வளவு தூரம் உண்மையோ என்பதை நாம் இப்பொழுது கூறுவதற்கில்லை. ஆனால் இந்தியாவிலுள்ள அதிகாரவர்க்கத்தினர், ஒத்துழையா இயக்கத்தை அடக்க இப்பொழுதுள்ள சட்டங்கள் போதாவென்றும், புதிய தேர் அடக்குமுறைச் சட்டத்தை அவர்கள் விரும்புகிறார்களென்றும் பலர் கூறுகின்றனர். கிரிமினல் புரொசீஜர் கோட்டையும் இந்தியன் பினல்கோட்டையும் விருப்பம்போல் அவர்கள் உபயோகிக்கும் தன்மையை நோக்கினால் தோற்றுப்போகும்தறுவாயிலிருக்கும் ஒரு வீரன், கடைசி முறையாகத் தன் ஆயுதங்களனைத்தையும் பிரயோகித்து வெற்றி பெற விரும்புவது போலிருக்கிறது. இத்தகைய நிலைமையில் அவனுக்குப் புதிய ஆயுதங்கள் வந்தால் அவன் எவ்வளவு திருப்தியடைவான் என்பதை நாம் கூற வேண்டுவதில்லை.

ஆனால் அரசாங்கத்தாருக்கு நாம் எச்சரிக்கை செய்ய விரும்புகிறோம். புதிய அடக்கு முறைச் சட்டங்களைக் கொண்டு ஒத்துழையா இயக்கத்தை அடக்கி விடலாம் என்று ஒருவேளை அவர் கருதினால், அக்கருத்து நிறைவேறாதென்பதை இப்பொழுதே எச்சரிக்கை செய்கிறோம். இப்பொழுதுள்ளநிலைமையில், இந்தியர்களின்தேசிய உணர்ச்சியை எத்தகைய அடக்குமுறைச்சட்டங்களாலும் எத்தகைய மிடுக்குள்ள அறிக்கைகளாலும் அடக்கமுடியாது.



புதிய அடக்குமுறைச் சட்டத்தை இந்தியா அரசாங்கத்தார் அமுலுக்குக் கொண்டுவரப் போகின்றனர் என்று இப்பொழுது எழுந்துள்ள வதந்தி பொய்யாகப்போக வேண்டுமென்று பெரிதும் விரும்புகிறோம்.

## இளவரசரின் பேச்சு

இந்தியா, ஜப்பான் முதலிய நாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்துவிட்டுவந்த இளவரசருக்கு ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் ஒரு விருந்தளித்தார். அப்பொழுது பிரதம மந்திரியார் பேசியதும் இளவரசர் அதற்குப் பதில் அளித்ததும் விநோதக்களஞ்சியங்களா யிருக்கின்றன. இவர்களுடைய பேச்சுகளினால், இந்தியாவிலுள்ள ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களுக்கும் யுத்தத்தில் வீரத்தைக் காட்டிய வீரர்களுக்கும், அரசகுடும்பத்தாருடைய நன்றியைச் செலுத்துவதற்காக இளவரசர் இந்தியாவுக்கு விஜயம் செய்தார் என்பது நன்கு புலனாகிறது.

ஒத்துழையாதார் இளவரசருடைய விஜயத்தைப் பகிஷ்கரித்தது பெருந்தவறு என்று கூறிவந்த மிதவாதிகள், இப்பொழுதேனும் அவருடைய விஜயத்தின் உட்கருத்தை உணர்ந்திருப்பார்கள் என்று கருதுகிறோம். ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களுக்கும் இந்திய வீரர்களுக்கும் தமது வந்தனத்தைச் செலுத்த வந்த இளவரசருக்காக, இந்தியா லட்சக்கணக்கான ரூபாய்களைச் செலவழித்தது. இந்தியாவைப்பற்றித் தாம் நேரில் கண்டறிவதற்காகவே, இந்த நாட்டிற்குவந்ததாக இளவரசர் கூறுகிறார் இவர் உபந்நியாசத்தில்,இந்தியாவைப் பற்றி இவர் எவ்வளவு அறிந்து கொண்டிருக்கிறார் என்பது நன்கு புலனாகிறது. இந்தியா ஒரு தேசமல்லாமல், ஒரு பெரியகண்டமாம். பல பிரிவினையுடையவரையும், பல பாஷைகளைப் பேசுவோரையும், பல்வேறு மதங்களை அநுசரிப்போரையும் அது தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கிறதாம். இந்தியாவைப் பற்றியுள்ள பள்ளிக்கூடபுத்தகங்களில்இந்த 'அரிய உண்மை'களை விளக்கமாகக் காணலாம்!

பிரிட்டிஷாருடைய அறிவும் உதவியும் இந்தியாவுக்குத் தேவையாயிருக்கிறது என்று பொருள்படும்படி இளவரசர் பேசியிருக்கிறார். இதனால் விளங்கும் பொருள் என்னை?

இந்தியா, தன்முடிவை எய்துவதற்கு ஐரோப்பிய உத்தியோகஸ்தர்கள் அதிக உதவி செய்துவருகிறார்களென்றும், அந்த உத்தியோகஸ்தர்களுக்கு பெரிய பிரிட்டனிலுள்ள அனைவரும் எல்லாவிதமான ஆதரவுகளை அளிக்கவேண்டுமென்றும் இளவரசர் கூறியிருக்கிறார்.

இதனின்றும் நாம் அறியவேண்டியதென்னை? இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அதிகாரிகள் எத்தகைய காரியங்களைச் செய்தபோதிலும், அதற்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஆதரவு அளிக்கவேண்டு மென்பதேயாகும். இந்தியாவிலுள்ள அதிகாரவர்க்கத்தினர், இத்தகைய உறுதி மொழிகளைப் பெற்றும் அவர் இன்னும் திருப்தியடைகின்றாரில்லை.

இளவரசர் இந்நோக்கத்தைக் கொண்டு விஜயம் செய்தாரென்பதையும், அவருடைய விஜயத்தைப் பகிஷ்கரித்த ஒத்துழையாதாரின் செயல் சரியானதா இல்லையா என்பதையும் இப்பொழுதேனும் மிதவாதிகள் உணர்வார்களாக. இளவரசருடைய விஜயத்தினால், இந்தியா, சுதேச மன்னர்கள் உள்பட, எவ்வளவு பணம் செலவழித்தது என்பதை இந்தியா அரசாங்கத்தார் அறிவிக்கும்படி இந்தியச் சட்டசபையில் எவரேனும் கேட்பரோ?

## இடியேறு

### 'கைதி'களும் பத்திரிகைகளும்

அலிபூர் சிறையிலுள்ள அரசியல் கைதிகளுக்கு 'இங்கிலீஷ் மான்' பத்திரிகையே அளிக்கப்படுகிறது. ஏன் மற்றப் பத்திரிகைகள் அளிக்கப்படுகிறதில்லை யென்று வங்காளச் சட்டசபையில் ஒரு கேள்வி கேட்கப்பட்டதற்கு, அரசியல் கைதிகளுக்குத் தேசீயப் பத்திரிகைகளைப்படிக்கக் கொடுத்தால்,அவர்கள், இதுகாறும் தாங்கள் நடந்து கொண்டு வந்தது மிகவும் சரியானதென்று நினைப்பார்கள் என்று கருதியே இங்ஙனம் செய்யப்படுகிறதென்று பதில் கூறப்பட்டது. தேசீயவாதிகளின் அபிப்பிராயங்களையும் உணர்ச்சியையும் அடக்க வங்காள அரசாங்கத்தார் என்னென்ன முயற்சிகளையெல்லாம் எடுத்துக் கொள்கின்றனர்!

### இந்திய அங்கத்தினர்களின் நிலைமை

'புதிய யுகத்து' நிருவாக சபைகளின் இந்திய அங்கத்தினர்களின் நிலைமைக்காக நாம் பெரிதும் இரங்குகிறோம். இவர்கள் செய்யும் உத்தரவுபடி ஐரோப்பிய உத்தியோகஸ்தர்கள் நடந்துகொள்வதில்லை யென்றும், பல விஷயங்கள் இந்த நிருவாக சபை அங்கத்தினர்களுக்குத் தெரியாமலே நடைபெறுகின்றன என்றும் சொல்லப்படுகின்றன. வங்காள அரசாங்கத்து நிருவாக சபை அங்கத்தினரான ஸ்ரீமான் அப்துர் ரஹீமைச் சிறைச்சாலைநிருவாக சம்பந்தமாகச் சட்டசபையில் சில கேள்விகள் கேட்டதும் அவர் தமக்கு ஒன்றும் தெரியாதென்று பதில் அளித்ததும் நேயர்களுக்குத் தெரியும். தாம் ஏதேனும் நன்மை செய்ய வேண்டுமென்று விரும்பினால் நிருவாக சபையிலுள்ள மற்ற அங்கத்தினர்கள் அதனை எதிர்க்கிறார்களென்றும், கூடிய விரைவில் சிறைச்சாலை இலாக்காவின் நிருவாகத்தை விட்டொழிக்கப் போவதாகவும் ஸ்ரீமான் அப்துர் ரஹீம் கூறினதாகத் தெரிகிறது. ஸ்ரீமான் அப்துர் ரஹீம் சுதந்தரவாதி என்று எவரும் சொல்வதுண்டு. அவருடைய நிலைமையே இங்ஙன மிருந்தால் மற்றவர்களின் நிலைமையைப்பற்றி நாம் கூறவும் வேண்டுமோ?

### இப்பொழுதே தெரிகிறது

காந்தியடிகளின் ஒத்துழையா இயக்கத்தினால் நாட்டிற்கு நன்மைகள் உண்டாயிருக்கின்றன என்பதை அதிகாரவர்க்கத்தினர் சிறிது சிறிதாக ஒப்புக் கொள்கின்றனர். சுதேசியத்தினால் அதிக நன்மை உண்டாகியிருக்கின்றன என்பதை வங்காளத்திலுள்ள பல ஜில்லா அதிகாரிகள் அங்கீகரித்துக் கொண்டிருக்கிறார்கள். வங்காளத்துக் கைத்தொழில் இலாகா மந்திரியும் இதனை அங்கீகரித்துக் கொண்டிருக்கிறார். ஆனால் சென்னை அரசாங்கத்துப் பொருள் அபிவிருத்தி மந்திரியார் கைராட்டினப் பெருக்கத்தால் எவ்வித நன்மையும் உண்டாகாதென்று கூறுகிறார். இரண்டு மந்திரிமார்களுக்குள்ளும் எவ்வளவு வித்தியாசம் காணப்படுகிறது!

### லெனினின் கொலை

ருஷ்ய போல்ஷ்வெக்கர்களின் தலைவரான நிகோலாய் லெனின் கொலை செய்யப்பட்டாரென்று ஒரு தந்திச் செய்தி கிடைத்திருக்கிறது. இவர் இறந்து போனார் என்று நான்காவது முறையாக இப்பொழுது சொல்லப்படுகிறது. ருஷ்ய சார் சக்ரவர்த்தி இறந்துபோனதைப்பற்றிப் பலவிதமான செய்திகள் வந்ததைப் போன்று லெனினைப்பற்றியும் பலவிதமான செய்திகள் கிடைக்கின்றன. இவரைப்பற்றி உண்மையான செய்தி கிடைத்த பிறகே இவரைப்பற்றி நாம் எழுதுவோம்.

### வீரமுள்ள ஒரு நீக்ரோ

மான்தோம்பி என்ற ஆப்பிரிக்கத் தலைவர் ஒருவர், எப்பொழுதும் உறக்கமாயுள்ள ஒரு வியாதியால் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார். இவர், தம் வியாதியைப் பரிசோதனை செய்து, அதன் மூலமாக ஜனங்களுக்கு நன்மை உண்டாகும் பொருட்டுத் தம் தேகத்தையே அர்ப்பணம் செய்து விட்டார். இவர் இதற்காக லண்டனுக்குப் பிரயாணமாகி அங்குள்ள ஒரு வைத்தியரிடத்தில் தம் தேகத்தை ஒப்புவித்துவிட்டார். இவ்வைத்தியர் நான்குமணிக் கொருமுறை, இந்த நீக்ரோவருடைய தேகத்திலிருந்து இரத்தத்தை எடுத்துப் பரிசோதனை செய்து கொண்டு வந்தார். இங்ஙனம் இரண்டு மாதம் பரிசோதனை செய்ததன் பயனாக வியாதியின் காரணமும் கண்டு பிடிக்கப்பட்டது. நீக்ரோவரும் இறந்து போனார். இவரன்றோ பரோபகாரி! உண்மை யான வீரர்!

### காந்தியடிகளும் ஓட்வியரும்

'உலகத்திலுள்ள பெரிய வஞ்சகருள் பெரியவர் காந்தியே' யென்று பஞ்சாபில் அசுர ஆட்சி நடாத்திய மைக்கல் ஓட்வியர் என்பான் உளறியிருக்கிறான். அலி சகோதரர்கள் பகிரங்கமாகவே பிரிட்டிஷ் ஆட்சிக்கு விரோதமாக இருக்கிறார்களென்றும் ஆனால் காந்தி உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுகிறார் என்றும் இவன் கூசாமற் கூறுகிறான். இந்தியர்களுடைய வரிப்பணத்திலிருந்து உபகாரச் சம்பளம் பெறும் இந்த 'நன்றியுள்ள' பிரிட்டிஷ் மகன் உலகத்திலுள்ள அறிஞரால் பெரிதும் போற்றப்படும் மகாத்மாவை இங்ஙனம் தூற்றியிருக்கிறான். இதை நீதியுள்ள பிரிட்டிஷ் உலகம் பொறுத்துக்கொண்டிருக்கிறது.

### மிதவாதிகளும் அரசியற் கைதிகளும்

இந்தியாவில் அரசியல் குற்றவாளிகளும் சாதாரண குற்றவாளிகளும் ஒரே விதமாக நடத்தப்படுகிறார்கள் என்பது அனைவரும் அறிந்த விஷயம். இங்ஙனம் உலகத்திலுள்ள எந்த நாகரிக அரசாங்கத்திலும் அரசியல் கைதிகள் நடத்தப்படுவதில்லை யென்பதும் பலர்க்குத் தெரியும். அரசியல் குற்றவாளிகள் சிறிது கௌரவமாக நடத்தப்பட வேண்டுமென்ற உணர்ச்சி இப்பொழுதே மிதவாதிகளுக்கு உண்டாயிருக்கிறது. சில மாகாணச் சட்ட சபைகளிலும் இந்தியச் சட்ட சபையிலும் இது சம்பந்தமாகச் சில தீர்மானங்கள் கொண்டு வரப்படும் என்று அறிகிறோம். இத்தீர்மானங்கள் எக்கதியை அடையும் என்பதைப்பற்றி நமக்குக் கவலையில்லையானாலும், அரசியல் குற்றவாளிகள் இப்பொழுது கேவலமாக நடத்தப்படுகிறார்களென்பதையும், அவர்களை இனியேனும் சரியாக நடத்த வேண்டுமென்பதையும் மிதவாதிகள் உணர்ந்ததற்காக நாம் மகிழ்ச்சியடைகிறோம்.

### பிரிட்டிஷ் நீதி

பிரிட்டிஷ் நீதிக்குச் சிறந்ததோர் உதாரணம் வேண்டுமானால் காந்தியின் விசாரணையையே எடுத்துக் கொள்ளலாம் என்று நியூ ஜீலந்தில் ஸ்ரீமான் சாஸ்திரியார் குறிப்பிட்டிருக்கிறார்; எப்பொருள் கொண்டு ஸ்ரீமான் சாஸ்திரியார் இந்த வாக்கியத்தைக் குறிப்பிட்டாரோ தெரியவில்லை. காந்தியடிகளை ஆறு வருஷம் தண்டித்தது, பிரிட்டிஷ் நீதியின் சிறப்பைக் காண்பிக்கிறதென்பது இவருடைய அபிப்பிராயமா? அல்லது அதற்கு மாறுபட்ட அபிப்பிராயத்தை இவர் கொண்டிருக்கிறாரா?

### எது முன்னேறுகிறது?

தென்னிந்தியாவை விட வட இந்தியாவே, தேசிய இயக்கத்தில் அதிகமாக ஈடுபட்டிருக்கிறது என்பதற்குப் பல ஆதாரங்கள் இருக்கின்றன. கோண்டால் என்ற சுதேச சமஸ்தானமொன்றில்தாசிகளும் தங்கள் தொழிலை விடுத்துத் தினமொன்றுக்கு எட்டுகஜம் கதர் துணி நெய்கிறார்களாம். இதைக்கேட்கும் போது, தென்னிந்தியாவில் பண்டைக் காலத்தில் பெண்கள் நூல்நூற்று வந்த வரலாறு ஞாபகத்திற்கு வருகிறது. கைராட்டினத்தில் நூற்பதனாலும், கைத்தறிகளில் நெசவு செய்வதனாலும் வாழ்க்கையை நடத்த முடியாது என்று கூறுவோர், கோண்டால் சமஸ்தானத்துத் தாசிகளைப் பின் பற்றினால் மிக நன்றாயிருக்கும் என்று விரும்புகிறோம்!

### கல்லா அறிஞர்

எல்லாவித நாகரிகங்களிலும் தலையெடுத்து நிற்கும் இங்கிலாந்திலும் எழுதப் படிக்கத் தெரியாதவர் இருப்பது மிகவும் விநோதமாயிருக்கிறது. ஹாரிஸ் என்ற ஒரு குடியானவர், வேறொருவர்மீது வழக்குத் தொடுத்திருந்தார். வழக்குத் தொடுத்த ஹாரிஸ் என்பவருக்கு எழுதப்படிக்கத் தெரியாது என்பதை நீதிபதி அறிந்ததும் இவருக்கும்ஹாரிஸுக்கும் பின் வரும் சம்பாஷணை நடைபெற்றது:—

நீதி :—எப்பொழுதாவது பத்திரிகை படித்திருக்கிறாயா?

ஹா :—இல்லை.

நீதி :—பத்திரிகை என்றால் என்ன என்பது தெரியுமா?

ஹா :—பத்திரிகைகளைப் பார்த்திருக்கிறேன்.

நீதி :—எத்தனை முறை பார்த்திருக்கிறாய்?

ஹா :—வாரந்தோறும் பத்திரிகை என் வீட்டிற்கு வரும்போது பார்த்திருக்கிறேன்.

நீதி :—எந்தப் பத்திரிகை வீட்டுக்கு வருகிறது?

ஹா :—எனக்குத் தெரியாது.

நீதி :—யுத்தம் நடைபெற்றது என்பதை எப்பொழுதாவது கேள்விப்பட்டிருக்கிறாயா?

ஹா :—யுத்தத்தைப் பற்றிப் பலர் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டிருக்கிறேன்.

நீதி :—யாருக்கு யுத்தம் நடைபெற்றது என்பதைப் பற்றித் தெரியுமா?

ஹா :—தெரியாது.

நீதி :—பிரிட்டிஷாராகிய நாம் யுத்தத்தில் வெற்றி பெற்றோம் என்பது உனக்குத் தெரியுமா?

ஹா :—அதைக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

நீதி :—பிறர் உனக்கு இவ்விஷயத்தைப் பற்றிக் கூறினார்களா?

ஹா :—ஆம்.

நீதி :—யுத்தத்தில் கப்பல்கள் சேதமானதையும் வீரர்கள் கொல்லப்பட்டதையும் கேள்விப்பட்டிருக்கிறாயா?

ஹா :—சொல்லக்கேள்விப்பட்டிருக்கிறேன்.

நீதி :—சென்ற ஐந்து வருஷ காலமாக நீ ஒரு சோல்ஜரைப் பார்த்திருக்கிறாயா?

ஹா :—பார்த்திருக்கிறேன்.

நீதி :—அவர்களுடன் பேசியிருக்கிறாயா?

ஹா :—பேசியிருக்கிறேன். ஆனால் அவர்களுடைய தொழில் என்ன என்பது எனக்குத் தெரியாது.

இத்தகைய நிலைமையில் இந்தியாவில் அறியாமை குடிகொண்டிருக்கிற தென்றும், அதனால் அதற்குச் சுய ஆட்சி கொடுக்கக் கூடாதென்றும் சில பிரிட்டிஷார் கூறுகின்றனர்!

### மூன்றாது வகுப்புப் பிரயாணிகள்

புகைவண்டிகளில் பிரயாணஞ் செய்யும் மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளின் பரிதாப நிலைமையைப்பற்றி நாம் அதிகமாகக் கூற வேண்டுவதில்லை. இவர்களிடத்திருந்தே அதிக கட்டணம் வாங்கப்படுகிறது. இவர்களே அதிகமாகக் கஷ்டப் படுகிறார்கள். இதைப்பற்றிப் பலர் பலவிதமாக முறையிட்டும் எவ்விதபயனும் உண்டாக வில்லை. அடுத்த இந்தியச் சட்டசபையில் மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளின் கட்டணங்களைக் குறைக்க வேண்டுமென்றும், அவர்களுக்குச் சில சௌகரியங்கள் செய்து கொடுக்கப்படவேண்டு மென்றும் ஸ்ரீமான் ஜோஷி ஒரு தீர்மானம் கொண்டுவரப்போகிறார். இத்தீர்மானத்தை ஆதரிக்கு முன்னர், அல்லது எதிர்க்கு முன்னர், இந்தியச் சட்டசபை அங்கத்தினர்கள் ஒரு முறையேனும் மூன்றாவது வகுப்பு வண்டியில்பிரயாணம் செய்யவேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறோம்.

### கதரின்மேல் கோபம்

கதர் துணியால் மூடப்பட்ட ஒரு பார்சலை ஸ்ரீமான் சந்தா என்பவருக்கு சிலாசார் என்ற ஊரிலிருந்து அவர் தகப்பனார் அனுப்பினார். ஆனால் தபால் இலாகா அதிகாரிகள் அப்பார்சல் கதர் துணியால் மூடப்பட்டிருக்கிறது என்று கூறித் திருப்பி அனுப்பிவிட்டனர். இதனால், அந்தப்பார்சல் ஒருநாள் தாமதமாகி விட்டது. இங்ஙனம் 'சர்வெண்டு' பத்திரிகை கூறுகிறது. கதரின் மீது அதிகாரிகளுக்குள்ள மயக்கம் இதனின்றும் நன்கு புலனாகும்.

### இந்தியக் கலகக்காரர்கள்

உலகத்திலுள்ள கலகக்காரர்கள் தலைபதி ஸர்சார்லஸ்யேட் என்னும் கனவானின் மூளையை உறிஞ்சிக்கொண்டு வருகிறார்களோ என்னவோ அறியோம். இந்தியாவில் கலகக்காரர்கள் கூவேதைப்பற்றி இந்தியாமந்திரியார் கவனித்தாரா என்று காமன்ஸ் சபையில் அவர்கேட்டார். அதற்கு லார்ட்வின்டர்டன், இந்தியா அரசாங்கத்தார்இதைப்பற்றிக் கவனித்துக் கொண்டு வருகின்றனரென்றும் ஆனால் அவர் என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகின்றனர் என்பதைப்பற்றி இப்பொழுது ஒன்றும் கூற முடியாதென்றும் பதிலிறுத்தார். எந்தக் கலகக்காரர்களைப் பற்றித் தளபதியேட் குறிப்பிட்டாரோ தெரியவில்லை. இந்தியா அரசாங்கத்தார் புதிய அடக்கு முறையைக் கையாளப் போகின்றனர் என்று இதனின்றும் ஊகிக்கலாமோ?

### தமிழ் மாகாண மகாநாடு

இவ்வாண்டு தமிழ் மாகாண மகாநாடு திருப்பூரில் கூடுமென்றும் இதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய நாளை அங்கு ஒரு கூட்டம் கூடுமென்றும் அறிகிறோம். ஏப்ரல் மாதத்திலேயே நடைபெற்றிருக்க வேண்டிய இம்மகாநாடு இன்னும் நடவாமலிருப்பது பெரிதும் வருந்தத்தக்கது. திருப்பூர் வாசிகள் உடனே இம்மகாநாட்டைச் சிறப்பாக நடத்தி வைப்பார்கள் என்றும் நம்புகிறோம்.

### 'நவசக்தி' ஆசிரியர்

ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் நாளை சனிக்கிழமை இரவு புறப்பட்டுத் திருவண்ணாமலைக்குச் சென்று அங்கு ஞாயிற்றுக்கிழமை நடைபெறும் ரமணாநந்த நிலையத்தின் எட்டாவது ஆண்டு நிறைவு விழாவில் 'புராணங்கள்' என்பதைப்பற்றிப் பேசுவார்.

## வெளிநாடுகளில் இந்தியர்கள்

பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு என்பார் முசபர் நகர் எனுமிடத்தில் ஓர் உபந்யாசஞ் செய்தார். அவ்வுபந்யாசத்தில் வெளி நாடுகளிலுள்ள இந்தியர்களைப் பற்றி அவர் கூறிய தன் சாரம் வருமாறு:—

இந்தியாவிலுள்ள இந்தியர்கள் அனைவரும் அவர்கள் எக்கட்சியினராய் இருந்தாலுஞ்சரி, வெளிநாடுகளிலுள்ள இந்தியர்களின் உரிமைகளுக்குப் பாதகம் நேரிடாதிருப்பதற்காகப் பாடுபடவேண்டும். இந்தியர்கள் தங்களைப் பொறுத்த விஷயங்களிலேயே மூழ்கியிருக்கிறார்களென்றும் அவர்கள் வெளி நாடுகளிலுள்ள தங்கள் இனத்தவரைப் பற்றிக் கவனிப்பதில்லை யென்றும் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் எண்ணியிருக்கின்றனர் போலும்! வெளி நாடுகளிலுள்ள இந்தியர்களின் உரிமைகளைக் காக்க நாம் தயாராய் இருக்கிறோம் என்பதை அவர்கள் அறியும்படியாய்க் காரியங்களைச் செய்ய வேண்டும். தென் ஆப்ரிக்காவிலும் கிழக்காப்பிரிக்காவிலும் இந்தியர்களுக்குஇருந்துவரும்கஷ்டங்களை நீக்க முயலல் வேண்டும். பிரிட்டிஷார் குடியேற்ற நாடுகளிலுள்ள இந்தியர்களைச் சரிசமமாய் நடத்தாவிட்டால் பிரிட்டிஷ் பிரஜை என்பதற்கு அர்த்தமில்லாமற் போகிறது.

### காந்தி தினக்கொண்டாட்டம்

காந்தி தினக்கொண்டாட்டம் இம்மாதம் 18-ந் தேதியில் இந்தியா வெங்கணும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. பம்பாயில் காந்தி தினத்தைக் கொண்டாடுவதற்காக நடைபெற்ற கூட்டத்தில் பண்டித மோதிலால் நேரு காந்தியின் பல நல்ல வேலைகளைப் பற்றிக் குறிப்பிட்டு, அவர் இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகவும் அஹிம்சா தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகவும், பண்டை இந்தியக் கைத்தொழில்களை புனர்உத்தாரணம்செய்வதற்காகவும்மிகுதியாகப் பாடுபட்டு இருக்கிறார் என்றும் கூறினர். சென்னைத்திருவல்லிக்கேணிக் கடற்கரையில் அன்றைய தினத்தில் காந்தி தினம் சிறப்பாகவே கொண்டாடப்பட்டது. பல தலைவர்கள் காந்தியின் செயல்களைப் பற்றிச் சொற் பொழிவுகள் நிகழ்த்தினர்கள்.

### தேசியக் கல்விக்கு நன்கொடை

முசபர் நகரைச் சேர்ந்த சேத்பேஹாரிலால் என்ற ஒரு கனவான் ஒரு லட்சம் வரும்படி வரக் கூடிய தம் சொத்தை யெல்லாம் தேசீய கல்விக்காகவும் தொழிற் கல்விக்காகவும் எழுதிவைத்து விட்டார். சொத்துக்கு தர்ம கர்த்தர்களாகப் பண்டித மதன் மோகன் மாளவ்யா, ஹக்கீம் அஜ்மல்கான், டாக்டர் அன்சாரி முதலியோர் நியமிக்கப் பட்டுள்ளார்கள்.

### ஹார்னிமான் தேசப்பிரஷ்டக் கண்டனக் கூட்டம்

பம்பாய்க் கிரானிகல் பத்திரிகையின் மாஜி ஆசிரியரான ஸ்ரீமான் பி. ஜீ. ஹார்னிமான் இந்தியர் பாதுகாப்புச்சட்டப்படி தேசப்பிரஷ்டம் செய்யப்பட்டதைக் கண்டிக்கும் பொருட்டு பம்பாயில் இம்மாசம் 18-ந் தேதியில் ஹக்கீம் அஜ்மல்கான் தலைமையில் ஒரு கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தில் பண்டித மோதிலால் நேரு, டி. பிரகாசம் முதலியோர் ஸ்ரீமான் ஹார்னிமான் நாடு கடத்தப்பட்டது சரியானதாகமாட்டாதென்று கூறினர்கள்.

### சிந்து மாகாணத்தில் காங்கிரஸ் பிரசாரம்

சிந்து மாகாணத்தில் அலி சகோதரர்களின் தாயான பீ அம்மனும், பீசம் முகம்மதலியும், சுவாமிசத்யதேவரும்சுற்றுப்பிரயாணஞ் செய்து கொண்டு ஸ்திரீகள் கூட்டங்களிலும் பொதுக் கூட்டங்களிலும் காங்கிரஸின் நிர்மாண வேலைத் திட்டத்தை நிறைவேற்ற வேண்டியதன் அவசியத்தைப்பற்றி உபந்யாசஞ் செய்து வருகிறார்கள்.

### சூரத்தில் தேசியக்கல்வி

சூரத்தில் தேசீயக் கல்வி ஸ்தாபனங்களில் 8000 மாணவர்கள் படிக்கின்றனர். நகர பரிபாலன சபைப் பள்ளிக்கூடங்களில் 1500 பேர் படிக்கின்றனர். ஆகவே நகர பரிபாலன சபையார் நகர பரிபாலன சபைப் பள்ளிக் கூடங்களுக்குப் பிள்ளைகளை அனுப்பாதவர்கள்மீது நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுமென்று உத்தரவிட்டனர். ஜனங்கள் தங்கள் பிடியில் விட்டுக் கொடாமல் இருப்பதைப் பார்த்த நகரபரிபாலன சபையார், தேசீயப் பள்ளிக்கூடம், நகரபரிபாலன சபைப் பள்ளிக்கூடம் வேறு பள்ளிக்கூடங்கள் ஆகிய இவைகள் ஒன்றிலும் வாசிக்காத பிள்ளைகளின் பெற்றோர்கள் மீது மட்டும்வழக்குத்தொடரப்படுமென்று தம் உத்தரவைத்திருத்திக்கொண்டனர்.

### சாதுக்கள் கட்டளைகளைமீறி நடத்தல்

ஹரித்வாரத்திலுள்ள சாதுக்கள் மத விஷயம் என்று சொல்லிக்கொண்டு முழுமையிலும் இராஜத் துரோகமானவைகளை ஜனங்களுக்குப் புகட்டுகின்றார்களென்று அபிப்ராயப்பட்டு, சாதுக்கள் மத சம்பந்தமான விஷயங்களைப் பற்றியும் உபந்யாசங்கள் புரியக்கூடாதென்று ஹரித்வார் ஜில்லா மாஜிஸ்ட்ரேட் 144-வது பிரிவுபடி கட்டளையிட்டார். இக்கட்டளைகளைச் சாதுக்கள் மீறி நடந்து வருகிறார்கள்.

### வாய்ப்பூட்டு

கடப்பை நகர எல்லைக்குள் ஸ்ரீமான்களான ஜீ. வி. புன்னைய்ய சாஸ்திரி, வாணியம்பாடியைச் சேர்ந்த மௌலானா மௌல்வி பசுலுல்லா சாயப் ஆகிய இவர்கள் உபந்யாசங்கள் செய்யக்கூடாதென்று அதிகாரிகளால் தடுக்கப்பட்டிருக்கின்றனர்.

### கூடலூர் சிறை-அரசியற் கைதிகள்

சென்னைச் சிறையிலிருந்த அரசியற் கைதியான ஸ்ரீமான் பி. வி. ஹனுமந்தராவ் என்பார் இம்மாதம் 14-ந் தேதி இரவில் கூடலூர்சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டா ரென்றும் அங்கிருந்த ஜனுப் தங்கமீரான் சாயப் சென்னைச் சிறைக்கு மாற்றப்பட்டார் என்றும் தெரிகிறது.

### தேசியகீதம் பாடியதற்காக

கல்கத்தாவைச் சேர்ந்த ஆறு ஒத்துழையா வாலிபர்கள் தேசீய பாட்டுக்களைப் பாடிக் கொண்டும் தேசீய பள்ளிக்கூடத்திற்காகப் பணந்தண்டல் செய்து கொண்டும் ஹாரிசன் ரோட்டில்போய்க் கொண்டிருந்தார்கள். போலீசார் இவர்கள் வழிமறித்து விட்டார்கள் என்று குற்றஞ்சாட்டிக் கைது செய்தார்கள். விசாரணை செய்த மாஜிஸ்ட்ரேட் இவர்களுக்கு எச்சரிக்கை செய்து விடுதலை செய்தார்.

### மாளவ்யா கைதியாக்கப்படுவாரா?

பண்டித மாளவ்யா கைதி செய்யாவிட்டாலும் அவருடைய உபந்யாசங்களில் இராஜத்துரோகமான விஷயங்கள் இருக்கின்றதா என்பதை ஆராய்வதற்காக ஒரு விசேஷ அங்கத்தினரை நியமிக்கா விட்டாலும் தாம் இராஜிநாமா செய்வதாக இராஜப் பிரதிநிதி நிருவாக சபையைச் சேர்ந்த ஓர் அங்கத்தினர் பயமுறுத்தி வருவதாகச் சமாசாரம் தெரிகிறதென்று அலகாபாத்தைச் சேர்ந்த அப்யுதாயா என்றபத்திரிகை கூறுகிறது.

### மத்திய மாகாணத்தில் காங்கிரஸ் வேலை

மத்திய மாகாண (ஹிந்துஸ்தானி) காங்கிரஸ் சமிட்டியில் ஜூலை 15-ந் தேதியில் இருந்த அங்கத்தினர்களின்தொகை 1,25,000 ஆகும். இன்னும் அங்கத்தினர்கள் சேர்ந்து கொண்டிருக்கிறார்கள். திலகர் சுயராஜ்ய நிதிக்கும் பணந் தண்டல் செய்யப்பட்டு வருகிறது.

### ஒரு காங்கிரஸ் தொண்டர் கொல்லப்பட்டார்

மிமின்சிங்கைச் சேர்ந்த சாராசார் காங்கிரஸ் காரியாலயத்தின் தொண்டராய் இருக்கும் பூபேந்திர சந்திரசாயா என்பார் காங்கிரஸ் ஆபீசிலேயே சென்ற 15-ந் தேதியில் கொல்லப்பட்டுக் கிடந்தார். இவ்விஷயமாக விசாரணை நடைபெற்று வருகிறது.

### சட்ட மறுப்பு விசாரணைக் கமிட்டி

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியால் நியமிக்கப்பட்ட சட்ட மறுப்புக் கமிட்டியார் நாகப்பூர் அகோலா ஆகிய இவ்விடங்களில் சுற்றுப் பிரயாணஞ் செய்துவிட்டு ஆமதாபாத்திற்கு இம்மாசம் 15-ந் தேதியில் வந்து சேர்ந்து அங்கே பல சாட்சிகளை விசாரணை செய்துவிட்டு 17-ந் தேதி காலையில் பம்பாய்ப் போய்ச் சேர்ந்து சாட்சிகளை விசாரணை செய்தனர். கமிட்டியார் இங்கிருந்து பூனா பீஜபூர் ஆகிய இவ்விடங்களுக்குச் சென்று விசாரணையை நடத்திவிட்டு 25-ந் தேதி காலை 7.50-மணிக்குச் சென்னை வந்து சேர்வர். பிஜபூர் முனிசிபாலிட்டியார் ஹக்கீம் அஜ்மல்கானுக்கும் பண்டித மோதிலால் நேருவுக்கும் ஓர் உபசாரப்பத்திரம் வாசித்துக் கொடுப்பார். இவர்கள் இங்கிருந்து 28-ந் தேதியில் ஈரோட்டிற்கு விஜயம்செய்யும்போது ஈரோட் நகர பரிபாலன சபையார் இவர்களுக்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுப்பார்கள்.

### மூழ்கி இறந்தார்கள்

ஈரோட்டிற்கு அருகிலுள்ள ஒரு கிராமத்திலிருக்கும் நான்கு வேளாள கூலி ஸ்திரீகள் தலையில் முட்டைகளை வைத்துக்கொண்டு ஈரோட்டிலுள்ள காளிங்கராயன் கால்வாயைத் தாண்டுகையில் சென்ற 17-ந் தேதியில் அகஸ்மாத்தாய் வீழ்ந்திறந்தார்கள். இருவரின் பிரேதங்கள்தான் கிடைத்தன.

## "திராவிடன்" வாய்மை!

ஸ்ரீமான் சிங்காரவேலு செட்டியார் எழுதியது:—

"திராவிடன்" பத்திராதிபருக்கு—ஐயா இந்த 150 வருஷ காலமாகப் பொன் விலங்கிடப்பட்டிருக்கும் நமது தேசத்தாருக்குச் சத்தியமார்க்கத்தால், அவ்விலங்கொழிந்து, சுதந்திரம் பெறுவது கஷ்டமானால் பொய்யைப் பேசி எங்ஙனம் நமது கேவல பந்தத்தை ஒழிக்க முடியும்? 28-ந்தேதி வெளி வந்த தங்கள் "திராவிடனில்" சென்னை காங்கிரஸ் சபைத் தலைவர் எழுதிய இராஜிநாமா கடிதத்தை என்னுடைய அனுமதியின் பேரில் பிரசுரம் செய்து எழுதிருப்பதாக எனது நண்பர்கள் சிலர் தெரிவிக்க, நான் அந்த விஷயத்தைப் பரிசோதிக்கையில் பின் வருமாறு வரைந்திருப்பதைக் காண்கின்றேன். "ஸ்ரீமான் எம். சிங்காரவேலு செட்டியார் சென்னை நகர காங்கிரஸ் சபை அங்கத்தினர்களுக்கும் கீழ்க்கண்ட கடிதத்தை அனுப்பியதுடன் அதனை வெளியிடுவதற்கும் அனுமதித்துள்ளார்." ஆனால் மேற்படிகடிதத்தைத் தங்கள் "திராவிடனுக்கு" அனுப்பவுமில்லை. அக்தக் கடிதத்தைப் பிரசுரம் செய்ய வாசிலும் உத்திரவு கொடுக்கவுமில்லை. யாதொரு அனுமதியுமில்லாமலிருக்க, அனுமதி யொன்றைக் கற்பித்துக்கொண்டு எழுதுவது பத்திராதிபருக்கு அழகாகுமா? தாங்கள் செய்த தவறைத் தாங்களே அங்கீகரிப்பீர்கள் என்று கோருகிறேன்,

ம. சிங்காரவேலு.

N. B. இதன் நகலொன்று திராவிடனுக்கு அனுப்பப்பட்டது.

### சர் வில்சனின் கொலையாளர்கள்

பீல்ட் மார்ஷல் சர் ஹென்றி வில்சனைக் கொலைசெய்தவர்களான டன், ஓ' சல்லிவன் ஆகிய இவர்கள் வழக்கு இம்மாதம் 18-ந் தேதியில் நடைபெற்றது. வழக்கின்போது டன் என்பார் தாம் ஐரிஷ்காரராய் இருப்பதற்காக உவகை கொள்வதாகவும் தாம் கூலிக்கு மார் அடிப்பவர் அல்லரென்றும் தேசத்திற்காக உயிரைத் துறக்கச் சித்தமாய் இருப்பதாகவும் கூறினர். ஓ! சலிவன் என்பார் ஒன்றும் பேசாமல் இறுதியில் ஐர்லாந்துக்காக இறப்பதை முன்னிட்டுச் சந்தோஷமே கொள்கிறேன் என்று கூறினர். பின்னர் நீதிபதி இவர்கள் இருவருக்கும் மரண தண்டனை விதித்தார்.

### முதலைகளின் உபத்திரவம்

கராச்சி ஜில்லாவிலுள்ள மால்கூ என்ற கிராமத்தில் ஒரு பையன் ஆடுகளை மேய்த்துக்கொண்டிருக்கையில் ஒரு ஆடு பக்கத்திலிருந்த கால்வாயில் தண்ணீர் குடிப்பதற்காகச் சென்றது. பையன் அக்கால்வாயில் முதலைகள் இருக்கின்றனவென்று அறிந்துஅதனால் அவ்வாடுஎங்கேபோய்விடுகிறதோஎன்று அஞ்சி ஆட்டைத் துரத்தப்போனான். அப்போது ஒரு முதலை, பையனையும் ஆட்டையும் காலைப்பிடித்திழுத்து விழுங்கிவிட்டது. குலாம் அல்லா என்ற ஒரு கிராமத்திலும் ஒரு சிறு பையன் இதே மாதிரியாய் முதலையால் விழுங்கப்பட்டான்.

### தண்ணீர்ப் பஞ்சத்தை நீக்க வழி

சென்ற வருடத்தில் இங்கிலாந்தில் ஏற்பட்ட தண்ணீர்ப் பஞ்சம் காரணமாகப்பௌதீக சாஸ்திரிகள் மூடுபனியைக் கொண்டு எப்போதும் தண்ணீர் இருந்துகொண்டிருப்பதற்குரிய முறைகளைப்பற்றி ஆராய்ச்சிசெய்து வருகிறார்கள்.

### இமயமலை உச்சியைக் காண முடியவில்லை

இமயமலை உச்சியைக் காணுவதற்காக இங்கிலாந்தினின்று வந்த இரண்டாவது கூட்டத்தார் சுமார் 27,000 அடிவரை ஏறிச் சென்றார்கள். அதற்கு மேல்போகக்கூடாமல் போகவே அக்கூட்டத்தார் திரும்பிவிட்டனர். இதன் பயனாக ஆறு இந்தியக் கூலிகள் மாண்டார்கள்.

### பாரிசாலில் வேலை நிறுத்தம்

வங்காள கவர்னர் இம்மாதம் 15-ந் தேதியில் பாரிசால் எனுமிடத்திற்குச் சென்றிருந்தார். அப்போது அங்கு 'ஹார்த்தல்' என்று சொல்லப்படும் வேலை நிறுத்தம் சில மணி நேரம் வரை நடைபெற்றது. பின்னர் சாதாரணமாக வேலைகள் நடைபெற்றன.

### ஒரு பெரியாரின் மரணம்

தில்லையம்பதி செங்குந்த மரபினில் தோன்றிய ஸ்ரீமான் தி. வ. தில்லைவன முதலியார் துந்துபி வருஷம் ஆனிமீ 30-ந் தேதி சுக்ர வாரம் விண்ணுலகு அடைந்தனர். மேற்படியார் குடும்பத்தாருக்கு எமது மனமார்ந்த அநுதாபத்தை அறிவிக்கின்றனம் என்று வி. கி. ஸ்ரீதர ஐயர் தெரிவிக்கிறார்.

### 'காதி'யின் மீது வரி

கோடுபோட்ட காதி என்ற ஒருவகைத் துணியின்மீது பவுன் ஒன்றுக்கு ரூபா விலை வீதம் போட்டு அதன்படி 1922-ம் வருஷம் ஜனவரி முதல் தேதியிலிருந்து வரி விதித்திருப்பதாக மைசூர் அரசாங்கத்தார் ஓர் அறிக்கையை வெளியிட்டுள்ளார்கள்.

### சிறைக்கைதிகளைக் குறைத்தல்

ஐக்கிய மாகாணத்திலுள்ள சிறைச்சாலைகளின் செலவைக் குறைப்பதற்காக, அரசியல் குற்றமல்லாத மற்ற சிறு குற்றங்களுக்காகத் தண்டிக்கப்பட்டிருப்பவர்களில் ஐயாயிரம் பேரை விடுதலை செய்ய ஐக்கிய மாகாண அரசாங்கத்தார் உத்தேசித்திருக்கின்றனர் என்று தெரிவதாகப் பயோனீர் பத்திரிகை கூறுகிறது.

### வங்காளத்தில் வேலை நிறுத்தங்கள்

24 பர்க்கனுக்கள் என்ற ஜில்லாவைச்சேர்ந்த மூன்று பெரிய சணல் மில்களைச் சேர்ந்த 28000 தொழிலாளர்கள் அதிகச் சம்பளம் வேண்டுமென்று வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள். மில்களைப் போலீசார் காவல் புரிந்து வருகிறார்கள். இதுவரை ஒருவிதமான குழப்பமும் உண்டாகவில்லை: ஹூக்லி சணல் மில் வேலை நிறுத்தம் இன்னும் பூர்ணமாய் முடிவடையாமல் இருக்கிறது. சில இலாகாக்களில் புதிய தொழிலாளர்களைக் கொண்டு வேலை நடைபெற்று வருகிறது. ஹௌரா சணல் மில்லில் நூல் நூற்கும் இலாகாவில் வேலை செய்யும் 350 பையன்கள் சர்தார் ஒருவர் வேலையினின்று நீக்கப்பட்டதற்காக வேலை நிறுத்தம் செய்து ஓர் ஐரோப்பிய உத்தியோகஸ்தர்மீது கற்களை எறிந்தனர். அதனால் அவ்வுத்தியோகஸ்தருக்குக் காயம்படவில்லை.

### பட்டினி விரதம்

தாம் வைத்திருந்த கிர்பாண எடுத்துவிட்டதற்காக ஜுலந்தர் சிறையிலிருக்கும் ஸ்ரீமான் மோதிசிங் என்பார் கடந்த ஐந்து தினங்களாக உண்ணாவிரதத்தை மேற்கொண்டிருக்கிறார் என்று குருத்வார பிரபந்தக் கமிட்டியார் கூறுகின்றனர்.





### ஒரு மாஜிஸ்ட்ரேட்டின் செயல்

முசோரி காங்கிரஸ் கமிட்டி, கிலாபத் கமிட்டி காரியதரிசிகளுக்கு, ஜில்லா மாஜிஸ்ட்ரேட், டேராடூன்போலீஸ் சூபரின்டெண்டண்ட் மூலமாய் பின்வரும் அறிக்கையை அனுப்பியுள்ளார்.

"நண்பர்கள் என்ற முறையில் உங்களுக்கு எச்சரிக்கை செய்வதற்காகவே நான் இக்கடிதத்தை அனுப்புகின்றேன். உங்கள் நடத்தையைப் பற்றி வாய் மொழியாக அநேகபிராதுகள் எனக்குக் கிடைத்திருக்கின்றன. அது வல்லாமல் சமீபத்தில் இருபத்தாறு நபர்கள் கையெழுத்தடங்கிய மனு ஒன்றும் வரப்பெற்றேன். அவர்கள் செய்த பிராது, ஒரு மனிதன் அடிக்கடி மால் எனுமிடத்திற்கு மணி அடித்துக் கொண்டு வருகிறான் என்பதும், அவனுடன் கூட வரும் இன்னொரு மனிதன் கிலாபத் காங்கிரஸ் கூட்டங்கள் என்று உரத்த குரலில் கூவிக்கொண்டு வருகிறான் என்பதுமாகும். ஐரோப்பியர்கள் செல்லும்போது தான் இம்மாதிரியான விஷயங்கள் மும்முரமாக நடைபெறுகின்றன. அவர்களுக்குக் கூட்டங்களைப் பற்றி ஒன்றும் ஆக வேண்டியதில்லை யாகையால், இம்மாதிரி செய்யப்படுவது அவர்களைக் கோபமூட்டுவதற்கேயாகுமென்றும் தெரிய வருகிறது. ஜாதிப் பகைமையையுண்டாக்குவது உங்கள் கட்சியின் கருத்து அல்லவாகையால், இம்மாதிரி செய்வது உங்கள் அநுமதியின்றி செய்யப்படுவதாகுமென்று நான் கருதுகிறேன். நீங்கள் இதைப்பற்றிக் கவனித்துத் தக்கன செய்வீர்களென்று நம்புகிறேன். இம்மாதிரி செய்யப்படுவது பொது ஜனங்களுக்குக் கஷ்டத்தை யுண்டாக்குவதாகும். இம்மாதிரி செய்பவர்களை இந்தியன் பினல்கோட்படி தண்டிப்பதற்கு சட்டம் இடங்கொடுக்கிறது. தண்டிப்பது சுலபமானதாகும். ஆனால் நான் முதலில் எச்சரிக்கையே செய்ய விரும்புகிறேன்"

இக்கடிதத்தைப் பிரசுரிப்பதற்காக அனுப்பும் கிலாபத் கமிட்டிக் காரியதரிசியார், மால் எனுமிடத்தில் ஐரோப்பியர்கள் மாத்திரம் வாசம் செய்யவில்லையென்றும் இந்திய வியாபாரிகளும் மற்றவர்களும், ஐரோப்பியர் வீடுகளில் வேலை செய்யும் இந்தியத்தொழிலாளர்களும் கூலிகளும் அங்கே வசிக்கிறார்கள் என்றும், ஆகவே அவ்விடத்தில் விளம்பரங்கள் செய்யப்படுவது ஐரோப்பியர்களுக்குக் கோபத்தை யுண்டாக்குவதற்காகச் செய்யப்படவில்லையென்றும் குறிப்பிடுகிறார்.

"யங் இந்தியா"

### சர் சங்கரன்நாயரும் ஓட்வியரும்

சர் சங்கரன் நாயர் சமீபத்தில் வெளியிட்ட "காந்தியும் அராஜகமும்" என்ற புத்தகத்தில் தம்மைப்பற்றி அவமானப் படுத்தி யிருப்பதற்காக சர் மைக்கல் ஓட்வியர் அவர்மீது ஒருவழக்குத் தொடுத்துள்ளார்.

### மாணவர்களும் கதரும்

ஆமதாபாத் தேசிய கல்லூரியைச் சேர்ந்த மாணவர்களும் ஆசிரியர்களும் பிரதி ஞாயிற்றுக்கிழமை தோறும் தேசிய கீதங்களைப் பாடுவதிலும் கதர் விற்பனை செய்வதிலும் தங்கள் காலத்தைச் செலவழிக்கிறார்கள்.

### மிலராண்ட் தாக்கப்பட்டார்

பிரெஞ்சு ஜனாதிபதியான மிலராண்ட் என்பார்மீது பிரெஞ்சு அராஜகன் ஒருவன் துப்பாக்கிப் பிரயோகம் செய்தான். ஆனால் பிரெஞ்சு ஜனாதிபதிக்கு ஒருவிதமான கெடுதலும் உண்டாகவில்லை.

## விளம்பர ஏஜன்ஸி

நாங்கள் இவ்வூரில் விளம்பர ஏஜன்ஸியாக இருந்து, சுவர்களில் பெரிய விளம்பரங்கள் ஒட்டுதல், துண்டு விளம்பரங்கள் பிரசுரித்தல் முதலிய வேலைகளைச்செய்து வருகிறோம். மேற் கூறியபடி விளம்பரஞ் செய்ய விரும்புவோர் எங்கட்கு ஆர்டர் கொடுக்க விரும்புகிறோம். விளம்பரம் ஒட்டுஞ் சுவர்கள் வாடகைக்கு வாங்கப்பட்டிருக்கின்றன. விகிதம் மிகக் குறைவு. வேண்டுவோர் எங்கட்கு எழுதி ஒரு முறை உங்கள் விளம்பரங்களை அனுப்பி வைப்பீர்களென்று நம்புகிறோம்.

R. S. RATHNAM & Sons,
Adverising and News Paper, Agents,
Big Chetti Street, Trichinopoly.

## இனும்! இனும்!!

விலாசம் தெரிவிப்போர்களுக்கு கும்பகோணம் வெண்பட்டுகள், உருமாலைகள், சேலைகள், ரவிக்கைகள், நார்மடிகள் அடங்கிய கிரய ஜாப்தா (கேட்லாக்) இனமாய் அனுப்புவோம்.

**வி. ராமய்யர் & கோ.,**
ஸில்க் ஹவுஸ், கும்பகோணம்

## 8-ம் வருட ஆரம்பம்.

"ஆனந்தபோதினி" என்னும் மாதச் சஞ்சிகைக்குவெட்டாவது வருஷம் (அடுத்த ஆடி௴) பிறக்கப்போகிறது. தமிழ்நாட்டில் தலைமைப் பெற்று விளங்குவதும் அதிக சந்தாதாரரை யுடையதும் இது தான். வருஷசந்தா ரூ. 1.

வெளிநாடுகளுக்கு ரூபா 1—4—0.
மாதிரி சஞ்சிகை இனம்.

"ஆனந்தபோதினி" ஆபீஸ், மதராஸ்.

## அங்கஹீனமுள்ள குழந்தைகளுக்கு

பிறவியிலேயே கணுக்கால் மூட்டுப் புரண்டு பாதம் மேலுக்குத் திருகிவளைந்து புரங்காலால் நடக்கும் 5-வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு சஸ்திர சிகிச்சையின்றி மேலுக்குத் தவளையும் கருவி பூட்ஸ்வகைகளைக் கொண்டே பாதங்களைத் திருத்தி நடக்கச் செய்யக் கூடும். அதற்குக் குடோரியான சஞ்சீவி தைலமும் இரும்பும் தோலும் சம்பந்தப்பட்ட பூட்சும் எம்மிடமுண்டு. சஞ்சீவி தைலம் 10-பலம் பாட்டில் 1-க்கு ரூ 3, இரும்பும் தோலும் சம்பந்தப்பட்ட பூட்ஸ் ரூ 5 எமது பீஸ் ரூ 2. ஆக ரூ 10. எமக்கு அனுப்பி கருவிகளைத் தருவித்து பார்சலுடன் வைத்து வரும் விபரப்படி செய்ய அவரவர்களே குணப்படுத்திக் கொள்ளலாம்.

### அயத்திராவகமும் லேகியமும்

இதன் சத்து தேகத்தில் சேரமெலிந்த தேகம் ரத்த விருத்தியுண்டாகி இருகிப் பருக்கும். சோகை, காமாலை, க்ஷயம், சுவாசகாசம், ஈளை, இருமல், அழல், கைகால் எரிச்சல் இன்னமும் பலரோகங்களையும் போக்கி தாதுவிர்த்தி மிகவுண்டாக்கும். 24 நாளைக்கு திராவகம் ரூ 2. லேகியம் ரூ 2. பத்தியமில்லை. ஷை மருந்துகளில் ஏதாவதொன்றை சாப்பிடலாம். வி. பி. செலவு பிரத்தியேகம். மருந்துடன் விபரம்வரும். மற்ற விபரம் தேவையுள்ளவர்கள் 1 அணா ஸ்டாம்புடன் எழுதவும்

V. கலியபெருமாள் நாயுடு,
"ஜீவரக்ஷாமிர்தம்"
1142, கீழ வீதி, தஞ்சாவூர்.

## சுகாதார போதினி

ஒரு மாதாந்தத் தமிழ் சஞ்சிகை. இதில் சுகாதாரம், வைத்தியம், மெஸ்மரிஸம், ஹிப்னடிஸம், கைத்தொழில் முதலிய விஷயங்கள் பிரசுரிக்கப்படும்.

வருஷ சந்தா ரூபா ஒன்று. மாதிரி காபி இனமாய் அனுப்பப்படும்.

மானேஜர்,
"சுகாதார போதினி"
12, அப்புமேஸ்திரி தெரு, ஜீ.டி. மதராஸ்.

---

ரப்பர் ஸ்டாம்பு செட்டு ரூ. 2.

S    சு.ப.ம.    S.K சு.க

பித்தளை அரக்கு சீல் ரூ. 1.

கேட்லாக்குக்கு எழுதிக் கேழ்க்கவும்.

**டி. ஜீ. சுந்தரம் அண்டு கோ.,**
கோவிந்தப்ப நாயக்கன் வீதி,
மதருஸ்.

## காஞ்சீபுரம் ஜவுளிகள்.

புதியதினுசு!! கேட்டிச்சாயம்!!

ஸ்பெஷலாய் எங்கள் கம்பெனியின் கைத்தறிகளில் தயாரானது. தினசரி துவைத்து உடுத்த மிகவும் சிரேஷ்டமானது. 4 முழத்திற்கு மேல் அழகிய பெங்களூர் பட்டு முந்தாணியும் பட்டுக்கரையுமுடையது.

| | | | | |
|---|---|---|---|---|
| சாதா கருப்பு உடல் | 18 x 2½ | 14 | 0 | 0 |
| மேகவர்ண உடல் | 18 x 2½ | 15 | 0 | 0 |

அழகிய பெங்களூர் தலப்புள்ள தமயந்தி, சகுந்தலா முதலிய உயர்ந்த பட்டு சேலைகளும், ரவிக்கைகளும், வேஷ்டிகளும் கிடைக்கும். கியாட்லாக் இனம்.

விட்டல் அண்டு கம்பெனி,
காஞ்சீபுரம்.

## அதி அற்புதம்

அரோரா என்கிற பேர்கொண்ட 'தேஜோ பிரம்மம்' தாவீத்ரக்ஷ தரித்தால் உம்முடைய பிரயத்தனங்க ளெல்லாம் கைகூடும். நவக்கிரகதோஷம் காற்று சேஷ்டையினல் உண்டாகும் பீடைகள் தொலைந்துபோகும். ஆதாயம் விர்த்தியாகும். புத்தி பிரகாசம் கொடுக்கும். எந்த வியாதியானலும் அற்புதமாய் சொஸ்தமாகும். வியாதி இல்லாதவர்களுக்கு எப்போதும் வியாதி வராமல் காப்பாற்றும். ஹிமாலய மலைகளிலிருக்கும் யோகிகளும், ரிஷிகளும் இதைக் கண்டுபிடித்து எமக்கு மஞ்சூர் செய்தார்கள். குலம், ஜாதி, மதம், வயது பேதமில்லாமல் இதை எல்லாரும் தரிக்கலாம். விலை ரூபா ஒன்று. தபாற் செலவு வேறு.

விலாசம்:—

பி. எஸ். நாத்,
பீச்பில்டிங்ஸ், விசாகப்பட்டணம்.

## தபால் தந்தி மித்திரன்

(இரண்டாம் பதிப்பு வெளியாகிவிட்டது.)

இதில் பர்மா தேசத்தைப் பற்றின வர்த்தக விஷயமாய்த் தெரிந்து கொள்ள வேண்டிய அநேக விஷயங்கள் விளக்கிக் காட்டப்பட்டுள்ளன. படி, நிறை, அளவுகளும், விளைபொருள்களின் காலவரையறையும், ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்களும், பினங், சிங்கப்பூர், சிலோன், பர்மா, இந்தியா முதலிய இடங்களிலுள்ள தபால் தந்தி ஆபீசுகளின் பெயர்களும் நடப்புவட்டி தவணைவட்டிகளின் விபரங்களும் வேறு சில முக்கிய விஷயங்களும் முதற் பதிப்பைவிட அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன. வர்த்தகர்களுக்கும், ஏனையோர்களுக்கும் இப்புத்தகம் அவசியம் வேண்டற்பாலது. சொற்பப் பிரதிகளே தயாராகியிருக்கிறபடியால் வேண்டுவோர் உடனே ஆர்டர் அனுப்பிப் பெற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

இதன் விலை ரூபா 2—0—0.
வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

வைசியகேசன் கம்பெனி,
தபால்பெட்டி, நெ. 251,
57, மெர்ச்சண்ட் வீதி, இரங்கூன்.

## புதிய புஸ்தகங்கள்

ஜடாவல்லவர் ரூ. 2-8

| | | | |
|---|---|---|---|
| ஞானம்பிகை | ... | 1 | 8 |
| ஞானசம்பந்தம் | ... | 1 | 4 |
| ஔவை அருந்தமிழ் | ... | 0 | 12 |
| பாண்டவர்களின் பாலலீலை | ... | 0 | 10 |
| புத்திமானேபலவான் | ... | 0 | 12 |
| கர்நாடக யோகினிக் கதைகள் | ... | 0 | 12 |

கே. பழநியாண்டி பிள்ளை கம்பெனி,
திருவல்லிக்கேணி, சென்னை.

---

ஆச்சரியமான

# நேத்திர வர்த்தனி அரக்

கிஷ்கிந்தா மால்யவந்த மலையிலிருந்த ஒரு மகாத்மாவால் தெரிந்து கொண்டு மலைகளில் கிடைக்கிற அருமையான வன மூலிகைகளாலேயே செய்யப்பட்டது. எவ்விடத்திலும் கிடைக்கமாட்டாது. இது பார்ப்பதற்கு குளிர்ந்த ஜலத்தைப்போலிருக்கும். இது எவ்வகை எண்ணெயில் கலந்த போதிலும் பசும் பால்போல் வெள்ளையாக ஆய்விடும். இதைத் தலைக்குத் தேய்த்து அப்பியங்க ஸ்நானஞ்செய்வதில்,

கண்களுக்குக் குளிர்ச்சியா யிருக்கும்
சூட்டினலாவது குளிர்ச்சியினலாவது உண்டான சளிப்பு
மார்சளிப்பு
தேகச்சூடு
சூட்டினல் தலைவலி
தலையில் தினவு
சூட்டினலாவது காரகத்தினலாவது தலைமயிர் உதிர்கிறது உதிராமலிருக்கும்
பித்தத்தினல் தலை சுற்றுகிறது
உஷ்ணத்தினல் தலை எரிச்சல்
பித்தத்தினல் தலை எரிச்சல்
கை கால் எரிச்சல்
தேகமெல்லாம் தினவு
தேக பளுவு
கண் எரிச்சல்
கண்ணோய்
கண்ணில் நீர் வடிதல்
கண் சிகப்பாயிருப்பது
கண் மஞ்சளாயிருப்பது
கண்ணில் தினவு
பித்தநீரினல் கண்மந்தமா யிருப்பது
சதா கண் எரிச்சல்
மேக காரகத்தினல் கண் இரப்பை மயிர்உதிருகிறதுஉதிராமல்இருக்கும்
பெரியவர்கள், வாலிபர்கள், ஸ்திரீகள் முதலானவர்களுக்கும் தலையில் தினவு, சிரங்கு, சுண்டுகளைப் போக்கும்
தேள்கடியை குணப்படுத்தும், பசி தீவினை யில்லாவிட்டால் உண்டாகும், எவ்வகை மேகரணத்தையும் ஆற்றும். குழந்தைகளுக்கு வயறு உப்புதலைப் போக்கும், புத்தியை சுறுசுறுப்புப்படுத்தும். 30-வயதுக்குட்பட்டவர்களுக்கு நரை மயிர் கருத்துவிடும்.

ஒரு புட்டியின் உபயோகத்தினலேயே இதன் குணத்தின் பெருமையைத் தெரிந்துகொள்ளலாம்.

இதன் ஆச்சரியமான குணத்தைப்பற்றி தென் இந்தியா, பினங்கு, சிங்கப்பூர், இரங்கோன், கொளம்பு முதலிய பல விடங்களிலுள்ள கனவான்களிடமிருந்து நற்சாக்ஷிப் பத்திரங்களும் பெற்றிருக்கிறோம்.

பெரிய புட்டி ரூபா 1 4 0    சிறிய புட்டி ரூபா 0 10 0

முழு விபரம் தெரிந்துக்கொள்ள கேட்லாக் இனமாக அனுப்பப்படும்.

☞ டி. சாமிநாத முதலியார், இராயப்பேட்டை, சென்னை.

---

## உலகத்தில் செய்யவேண்டிய பெரிய வேலை எது?

நோய்க்கிடங்கொடாமல் சரீரத்தை காப்பாற்றிக்கொள்வதே சிறந்த வேலை. சரீரத்தில் எவ்வித் மாறுபாடு ஏற்படினும் உடனே ஆதங்க நிக்ரஹ மாத்ரைகளை உபயோகப்படுத்த வேண்டும். சரீர சம்பந்தமான வியாதிகளைப் போக்கும் அமிர்தம் இதுவே.

32 மாத்திரைகள் கொண்ட டப்பி 1-க்கு விலை ரூபா 1.

இன்னும் விபரம் வேண்டுவோர் எங்கள் காம சாஸ்திரம் என்னும் வைத்தியநூலை வரவழைத்துப் படியுங்கள். தபாற்செலவின்றி இனமாய் அனுப்பப்படும்.

வைத்திய சாஸ்திரி மணிசங்கர் கோவிந்தஜீ,
ஆதங்க நிக்ரஹ ஔஷதாலயம், 26, பிராட்வே மதராஸ்.
45, மேலக் கோபுரவீதி, மதுரை.

---

இனும்!    ரூபா 100    இனும்!!

## ஸர்வ ஸர்ப விருஸ்சிக விஷ ஸஞ்சீவி

எப்பேர்பட்ட பாம்புகடிகளாய் இருந்தபோதிலும் சரி, தேள் கொட்டுகளா இருந்தபோதிலும் சரி, இந்த ஸஞ்ஜீவியை உபயோகித்த உடனே அந்த நிமிஷமே கண்டிப்பாய்க் குணப்படுத்தும். குணமில்லையென்று சத்தியமாக ரூபிப்பவர்களுக்கு ரூபா 100 இனம் கொடுக்கப்படும்.

புட்டி 1-க்கு அணா 6. டஜன் 1-க்கு தபால் சார்ஜ் உள்பட ரூபா 3-8-0. டஜன் வாங்குகிறவர்களுக்கு மஹாத்மா காந்தியின் உருவப் படம் இனம்.

ஸ்வராஜ்ய மெடிகல் ஸ்டோர்ஸ், திண்டிவனம்.

---

சுதேசியமானது!    உபயோகமானது!!

## அமிர்தாஞ்சனம்

### எல்லா நோய்களுக்கும் சித்தௌஷதம்

தலைநோய், முதுகுநோய், இடுப்புவலி, மார்ச்சளி, சைத்தியம், கீல்பிடிப்பு, இருமல், ஒத்தைத் தலைநோய், வீக்கம், சுளுக்கு முதலான நோய்களுக்கு திவ்யாமிருதம். டப்பி 1-க்கு (—10—0. டஜன் 1-க்கு 6— 0—0.

| படை மருந்து | பற்பொடி | மோஹினி தைலம் |
|---|---|---|
| டப்பி 1-க்கு 0—6—0 | டப்பி 1-க்கு 0—2—0 | டப்பி 1-க்கு 0—12—0 |

அமிர்தாஞ்சனம் டிபோ, மதராஸ், பொம்பாய்.

Printed and Published by T. V. Kalyanasundara Mudaliar, at the Sadhu Press, 44-Bazaar Road, Royapettah, Madras.

